45

# FOLK TALES

## IN SIMPLE TAMIL

23 MAR 1918
MADRAS

BY

PANDIT C. SOMASUNDARAM PILLAI

*Tamil Pandit, St. Bede's European High School and the Editor of the 'Sarguru', Madras*



MACMILLAN & CO., LIMITED
MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1917 [விலை, ச அணா.

0-,8x
N17
85791

# FOLK TALES

## IN SIMPLE TAMIL

23 MAR 1918
MADRAS

BY

PANDIT C. SOMASUNDARAM PILLAI

*Tamil Pandit, St. Bede's European High School and the Editor of the 'Sarguru', Madras*



MACMILLAN & CO., LIMITED
MADRAS, BOMBAY, CALCUTTA AND LONDON

1917

# பழங்கதைகள்




சென்னை, ஸெயின்ற் பீட்ஸ் யூரோபியன் ஐ ஸ்கூல்
தமிழ்ப் பண்டிதரும், சற்குரு பத்திராதிபருமாகிய
சே. சோமசுந்தரப்பிள்ளை
எழுதியது.



மாக்மில்லன் கம்பெனி லிமிடெட்
சென்னை, பம்பாய், கல்கத்தா, லண்டன்

1917

# பொருள் அட்டவணை.

# FOLK TALES

## IN SIMPLE TAMIL



### 1. மீன்.

பலநாளைக்கு முன்னே இராஜன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஏழு பிள்ளைகள் இருந்தார்கள். அந்த ஏழுபேரும் வேடிக்கையாக வேட்டையாடப் புறப்பட்டுப் போனார்கள். போன அந்த ஏழுபேரும் மான் முயல் முதலான மிருகங்களை வேட்டையாடி வராமல் ஒரு குளத்திலிருந்து ஏழு மீன் பிடித்துக்கொண்டு வந்தார்கள். அந்த மீன்களை வெயிலில் காயவைத்தார்கள். அந்த மீன்களிலே ஒரு மீன்மாத்திரம் உலரவில்லை. அப்போது அந்த உலராதமீனைப் பார்த்து, "மீனே, மீனே, ஏன் உலரவில்லை?" என்று இராஜகுமாரன் கேட்டான்.

அதற்கு அந்த மீன், "இராஜகுமாரனே, இராஜகுமாரனே, புற்கட்டு குறுக்கே இருந்தது; அதனால் நான் காயவில்லை," என்று பதில் சொன்னது.

இராஜகுமாரன், "புற்கட்டே, புற்கட்டே, ஏன் குறுக்கே இருந்தாய்?" என்று புற்கட்டைக் கேட்டான்.

புற்கட்டு, "இராஜகுமாரனே, இராஜகுமாரனே, குதிரை வந்து என்னைத் தின்னவில்லை," என்றது.

இராஜகுமாரன் குதிரை பண்டை போய், "குதிரையே, குதிரையே, நீ ஏன் புல்லைத் தின்னவில்லை?" என்று கேட்டான்.

குதிரை, "இராஜகுமாரனே, இராஜகுமாரனே, குதிரைக்காரன் என்னைப் புற்கட்டு இருக்கும் இடத்திற்கு ஓட்டிக் கொண்டு போகவில்லை," என்று சொன்னது.

இராஜகுமாரன் குதிரைக்காரனைப் பார்த்து, "குதி[illegible] காரனே, குதிரைக்காரனே, ஏன் குதிரையைப் புல் இருக்[illegible] இடத்திற்கு ஓட்டிக்கொண்டு போகவில்லை?" என்று கே[illegible] டான்.

குதிரைக்காரன் அப்போது, "இராஜகுமாரனே, இ[illegible] குமாரனே, பாட்டி எனக்குக் கஞ்சி வார்க்கவில்லை; அத[illegible] நான் அதை ஓட்டிக்கொண்டு போகவில்லை," என்று [illegible] னான்.

இராஜகுமாரன், "பாட்டி, பாட்டி, ஏன் கஞ்சி வார்க்கவில்லை?" என்று கேட்டான்.

பாட்டி, "இராஜகுமாரனே, இராஜகுமாரனே, குழந்தை அழுதுகொண்டிருக்கிறான்; அதனால் கஞ்சி வார்க்கவில்லை," என்று சொன்னாள்.

இராஜகுமாரன் குழந்தையைப் பார்த்து, "குழந்தையே, குழந்தையே, ஏன் அழுகிறாய்?" என்று கேட்டான்.

குழந்தை, "இராஜகுமாரனே, இராஜகுமாரனே, என்னை எறும்பு கடித்தது," என்று சொல்லிற்று.

இராஜகுமாரன் எறும்பைப் பார்த்து, "எறும்பே, எறும்பே, என் குழந்தையைக் கடித்தாய்?" என்று கேட்டான்.

எறும்பு, "இராஜகுமாரனே, இராஜகுமாரனே, என் புற்றில் கையை வைத்தால் நான் கடிக்காமலும் சும்மா இருப்பேனோ?" என்று சொல்லிற்று.



## 2. ஈ.

ஒரு அழகான ஈ இருந்தது. அந்த ஈ ஒருநாள் தன் வீட்டை மெழுகினது. மெழுகும்போது தன் பெயரை மறந்துவிட்டது. அப்போது அந்த ஈ அருகில் இருந்த ஔவையாரண்டை போய், "ஔவையே, ஔவையே, என் பெயர் என்ன?" என்று கேட்டது.

ஔவை, "எனக்குத் தெரியாது; என் பிள்ளையைக் கேள்," என்று சொன்னாள்.

ஈ, ஔவைப் பிள்ளையண்டை போய், "ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, என் பெயர் என்ன?" என்று கேட்டது.

ஔவைப்பிள்ளை ஈயைப் பார்த்து, "எனக்குத் தெரியாது; என் கைக்கோடாலியைக் கேள்," என்றான்.

ஈ:—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையின் கைக்கோடாலியே, என் பெயர் என்ன?"

கோடாலி:—"எனக்குத் தெரியாது; நான் வெட்டும் மரத்தைக் கேள்."

ஈ:—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையின் கைக்கோடாலியே, கைக்கோடாலியே, அந்தக் கைக்கோடாலிவெட்டும் மரமே, என் பெயர் என்ன?"

மரம்:—"எனக்குத் தெரியாது; என் கிளையில் உட்காரும் கிளியைக் கேள்."

ஈ:—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையின் கைக்கோடாலியே, கைக்கோடாலியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரமே, மரமே, அந்த மரத்திலிருக்கும் கிளியே, என் பெயர் என்ன?"

கிளி:—"எனக்குத் தெரியாது; நான் குடிக்கும் தண்ணீரைக் கேள்."

ஈ:—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையின் கைக்கோடாலியே, கைக்கோடாலியே, ஔவைப்பிள்ளையின் கைக்கோடாலிவெட்டும் மரமே, மரமே, ஔவைப்பிள்ளையின் கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளியே, கிளியே, அந்தக் கிளி குடிக்கும் தண்ணீரே, என் பெயர் என்ன?"

தண்ணீர்:—"எனக்குத் தெரியாது; என்னிடத்தில் இருக்கும் மீனைக் கேள்."

ஈ:—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலியே, கைக்கோடாலியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரமே, மரமே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளியே, கிளியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரே, தண்ணீரே, அந்தத் தண்ணீரில் வாழும் மீனே, என் பெயர் என்ன?"

மீன்:—"எனக்குத் தெரியாது; என் குஞ்சுகளைத் தின்னும் அரசனைக் கேள்."

ஈ:—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலியே, கைக்கோடாலியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரமே, மரமே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரத்திலிருக்கும் கிளியே, கிளியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரே, தண்ணீரே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரத்திலி

ருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரில் வாழும் மீனே, மீனே, அந்த மீனின் குஞ்சுகளைத் தின்னும் அரசே, என் பெயர் என்ன?"

**அரசன்:**—எனக்குத் தெரியாது; நான் ஏறும் குதிரையைக் கேள்."

**ஈ:**—"ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலியே, கைக்கோடாலியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரமே, மரமே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரத்திலிருக்கும் கிளியே, கிளியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரே, தண்ணீரே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரில் வாழும் மீனே, மீனே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரில் வாழும் மீனைத்தின்னும் அரசே, அரசே, அந்த அரசன் ஏறும் குதிரையே, என் பெயர் என்ன?"

**குதிரை:**—"எனக்குத் தெரியாது; என் வயிற்றிலிருக்கும் குட்டியைக் கேள்."

**ஈ:** — "ஔவையே, ஔவையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளையே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலியே, கைக்கோடாலியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலிவெட்டும் மரமே, மரமே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளியே, கிளியே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரே, தண்ணீரே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரில் வாழும் மீனே, மீனே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரில் வாழும் மீனைத்தின்னும் அரசே, அரசே, ஔவைப்பிள்ளை கைக்கோடாலி வெட்டும் மரத்திலிருக்கும் கிளி குடிக்கும் தண்ணீரில் வாழும் மீனைத் தின்னும் அரசன் ஏறும் குதிரையே, குதிரையே, அந்தக் குதிரையின் வயிற்றில் இருக்கும் குட்டியே, என் பெயர் என்ன?"

அதற்கு அந்தக் குதிரைக்குட்டி "ஈ, ஈ" என்று பல்லைக் காட்டிற்று.

உடனே அந்த ஈ தன் பெயரைச் சொல்லிக்கொண்டே போவதுபோல "ஈ ஈ" என்னும் சத்தத்துடன் பறந்து போயிற்று.





## 3. பேன்.

ஒருகாலத்தில் பெரிய பேன் ஒன்று இருந்தது. அந்தப் பேன் தன் வயலில் பச்சைப்பயறு விதைத்தது. அந்த ஊர் அரசன் ஒருநாள் ஊரின் க்ஷேமத்தை விசாரிக்கப் பல்லக்கில் ஏறிக்கொண்டு அந்த வழியாகப் போனன். போகும்போது, "இது யாருடைய கழனி?" என்று அந்தக் கழனியைக் காட்டிக் கேட்டான். அங்கிருந்தவர்கள், பேனினுடைய கழனி என்று சொன்னர்கள்.

அரசன், "பேனுக்குக்கூட ஒரு கழனியா! அதைப் பிடித்து நசுக்குங்கள்," என்று சொன்னன்.

அந்த வார்த்தையைக்கேட்ட பேன், "இந்த அரசனுக்குக்கூடவா ஒரு பல்லக்கு! இந்த அரசனைப் பிடித்துக் காலால் மிதியுங்கள்," என்று சொல்லிற்று.

அதைக்கேட்டதும் அரசனுடைய ஆட்களுக்குக் கோபம் பிறந்தது. உடனே அவர்கள் கழனியை மிதித்துத் துவைத்துக்கொண்டு போனார்கள்.

அப்படி மிதித்துத் துவைத்துக்கொண்டு போனது போக மிச்சமாக இருந்த இடத்தில் விளைந்திருந்த பயற்றை அறுத்து, மா அரைத்து, பெரிய ரொட்டி ஒன்று சுட்டது.

அரசன்பேரில் தனக்குள்ள வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள, அந்த ரொட்டியைத் தலையில் தூக்கிக்கொண்டு புறப்பட்டது. கொஞ்சதூரம் போனதும் ஒரு தேளைக் கண்டது.



கண்டு, "ஓ தேள் மாமா, தேள் மாமா, உனக்கு ஒரு ரொட்டித் துண்டு தருகிறேன்; நீ என்னோடு வா," என்று கூப்பிட்டது. தேள் அந்தப் பேனோடு போயிற்று.

தேளோடு கொஞ்சதூரம் நடந்ததும், செய்யான் ஒன்று எதிரில் வந்தது. அதைப்பார்த்து, "செய்யான் மாமா, செய்யான் மாமா, என்னோடு வா; உனக்கு ஒரு ரொட்டித்துண்டு தருகிறேன்," என்று சொல்லிற்று.

"அப்படியே வருகிறேன்," என்று சொல்லி அதன் பின்னால் செய்யான் நடந்தது.

தேளோடும் செய்யானோடும் சிறிது தூரம் போனதும் பெரிய புலி ஒன்றை அந்தப் பேன் சந்தித்தது. உடனே அந்தப் புலியைப் பார்த்து, "புலி மாமா, புலி மாமா, உனக்கு நல்ல ரொட்டித்துண்டு ஒன்றைக் கொடுக்கிறேன்; நீ என்னோடு வருகிறாயா?" என்று கேட்டது.



"அதற்கு என்னதடை!" என்று சொல்லிக்கொண்டே அதன் பின்னுல் போயிற்று.



தேளோடும் செய்யானேடும் புலியோடும் அந்தப் பேன் சிறிது தூரம் நடந்து போய்க்கொண்டிருக்கையில் மிருகங்க ளுக்கெல்லாம் அரசனுன சிங்கம் ஒன்று வந்தது. அதைப் பார்த்து, "சிங்கம் மாமாவே, சிங்கம் மாமாவே, என்னேடு

கொஞ்சதூரம் வா; உனக்கு இனிப்பான ரொட்டித்துண்டு தருகிறேன்," என்று சொல்லி அழைத்தது.

"உன் இஷ்டப்படியே வருகிறேன்," என்று அதன் பிறகே போயிற்று.

இந்த நாலுபேருடன் அந்தப் பேன் அரசனுடைய அரண்மனையை அடைந்தது. முதலில் சிங்கத்தை அரண்மனையின் வெளி வாயிலண்டை காவல் இருக்கும்படி சொல்லி, அதைக் காவல் வைத்தது. அதன்பிறகு புலியைப் புறங்கடை வாயிலில் காவல் வைத்தது. அதற்கு அப்புறம் செய்யானை அரசனுடைய காற்செருப்பில் நுழைந்துகொள்ளும்படி சொன்னது. அதன்பின் தேளை அங்கிருந்த மாடம் ஒன்றில் நுழைந்துகொள்ளச் செய்தது.

இப்படி அந்த நாலுபேரையும் வெவ்வேறு இடங்களில் இருத்தினபிறகு, தான் மெதுவாக அரசன் மீதேறி அவன் மீசைக்குள் நுழைந்து, அவனைக் கடித்து உபத்திரவஞ் செய்து கொண்டேயிருந்தது.

பேன் இரண்டொருமுறை தன்னைக் கடித்ததும் அரசன் மீசையை வாருதற்காக மாடத்திலுள்ள சீப்பை எடுக்கத் தன் கட்டிலடியிலிருந்த செருப்பில் காலிட்டான். காலிட்டதுதான் தாமதம்; உடனே செய்யான் கடித்தது.

கடித்ததும், செருப்பை உதறிவிட்டு, நடந்துசென்று மாடத்தில் கைவைத்தான். அரசன் வரவை எதிர்பார்த்திருந்த தேள் அந்தக்ஷணமே கையில் கொட்டினது. தேள் கொட்டுதலுக்கு மருந்து தேடப் புறங்கடை வாயிற் கதவைத் திறந்தான்; அங்கிருந்த புலி மேல்விழுந்து பாய யத்தனித்தது. உடனே ஓடோடி வந்து கதவைத் தாழிட்டுவிட்டு, வெளியிலிருந்த ஆட்களைக் கூவத் தெருக்கதவைத் திறந்தான். அங்கிருந்த மிருகராஜனான சிங்கம் மேலேவிழுந்து அவன் ஊட்டியைப் பிடித்தது.





## 4. சிட்டுக்குருவி.

"சின்ன சின்ன சிட்டுக்குருவி, சிங்காரச் சிட்டுக்குருவி" என்று சிறுவர்கள் பாட்டுப் பாடுகிருர்களே, அந்தச் சிட்டுக் குருவிகளை நீங்கள் பார்த்திருக்கிறீர்களல்லவா? அந்தச் சிட்டுக்குருவிகளில் ஒன்று, ஒருநாள், ஒரு விளாமரத்தின்மீது உட்கார்ந்துகொண்டு, தன் அலகினுல் ஒரு விளாங்கனியைக் கொத்தித் தின்றுகொண்டிருந்தது.

அந்தச் சமயத்தில் வேட்டையாடிக் களைத்த அரசனொருவன், வெயிலுக்காக, அந்த மரத்தின் அடியில் தங்கினுன். அவன் அண்ணுந்து மரத்தைப் பார்த்தான். அதில் பந்துகள் தொங்கவிடப்பட்டு இருப்பனபோலப் பழங்கள் தொங்குவதைக் கண்டான். அவைகளில் ஒன்றைப் பறித்துத் தின்ன வேண்டும் என்னும் ஆசை அவனுக்கு உண்டாயிற்று. ஆசை உண்டாகவும் மரத்தைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தான்; அங்கிருந்த சிட்டுக்குருவி அவன் கண்ணில் பட்டது. உடனே அந்தக் குருவியைப் பார்த்து, "சிட்டுக்குருவியே, சிட்டுக் குருவியே, எனக்குப் பழமொன்றைப் பறித்துப் போடாயோ?" என்று கேட்டான்.

"அப்படியே ஆகட்டும்," என்று அந்தச் சிட்டானது கனி யொன்றைப் பறித்து அதற்குள்ளிருந்த பழத்தைத் தோண்டி எடுத்துவிட்டு அதற்குப் பதிலாகத் தன் அழுக்கை (மலத்தை)ப் போட்டு மூடிக் கீழே எறிந்தது.

அரசன் ஆவலுடன் அதை யெடுத்து உடைத்தான். உள்ளே பழமில்லை; அதற்குப் பதிலாக அழுக்கு நிறைந் திருந்தது. அப்படி நிறைந்திருப்பதைக் கண்டான்; கோபம் அவனுக்கு மூண்டெரிந்தது. உடனே தன் ஆட்களைவிட்டு அந்தக் குருவியைப் பிடித்துவரச்சொல்லி, பிடித்து வந்ததும் அதன் கால்களைக் கட்டி, அரண்மனைக்கு எடுத்துக்கொண்டு போய் அங்கிருந்த தட்டியொன்றில் கட்டினான்.

சிறிதுநேரமானதும் சிட்டுக்குருவியைப் பார்த்து, "சிட்டுக் குருவியே, சிட்டுக்குருவியே, செத்தாயோ, பிழைத்தாயோ?" என்று கேட்டானரசன்.

"அரசே, அரசே, நான் ஏன் சாகிறேன்! தாதாவோடு தடுக்கு முடைந்துகொண்டு க்ஷேமமாகவே இருக்கிறேன்," என்று சொல்லிற்று அந்தச் சிட்டு.

அதைக் கேட்டதும் அவனுக்குக் கோபம் உண்டாயிற்று. உடனே அவன் தன் வேலைக்காரனை அனுப்பித் தன் கட்டிற் காலில் கட்டிப்போடும்படி செய்தான்.

சற்றுப் பொறுத்து, "சிட்டுக்குருவியே, சிட்டுக்குரு வியே, இப்பொழுது எப்படி இருக்கிறாய்? செத்தாயோ அல் லது பிழைத்தாயோ?" என்று அரசன் கேட்டான்.

"நான் ஏன் சாகிறேன்! சுகமாகத்தான் இருக்கிறேன். இந்தக் கயிற்றுக்கட்டிலை, மாமாவோடு பின்னிக்கொண்டிருக் கிறேன்," என்று சிட்டுக்குருவி பதில் சொன்னது.

அந்தப் பதிலைக் கேட்டதும் அரசனுக்குக் கோபம் அதி கரித்தது. அதிகரிக்கவும், தன் சேவகனைக் கூவியழைத்து, "கட்டிலிலிருந்து இந்தக் குருவியை யவிழ்த்து எடுத்துக் கொண்டுபோய்ச் சேற்றில் புதை," என்று சொல்லிச் சேற்றில் புதைப்பித்தான்.

பிறகு சிட்டுக்குருவியைப் பார்த்து, "சிட்டுக்குருவியே, சிட்டுக்குருவியே, செத்தாயோ அல்லது பிழைத்திருக்கி றாயோ?" எனக் கேட்டானரசன்.

அதற்கு அந்தச் சிட்டுக்குருவி, "அரசே, அரசே, நான் ஏன் சாகிறேன்! சுகமாகப் பிழைத்திருக்கிறேன். ஊறுகாய் போலச் சேற்றில் ஊறிப் பொத பொத என்றிருக்கிறேன்," என்று சொல்லிற்று.

"அப்படியா!" என்று சொல்லித் தன் சேவகனை வரவழைத்து, "இதை எடுத்துப்போய்க் கிணற்றில் எறி," என்று கட்டளையிட்டான். அவனும் அப்படியே எடுத்துக்கொண்டு போய்க் கிணற்றில் எறிந்தான்.

சிறிதுநேரஞ் சென்றதும், "சிட்டுக்குருவியே, சிட்டுக் குருவியே, செத்தாயோ அல்லது பிழைத்திருக்கிறாயோ?" என்று அரசன் அந்தக் குருவியைப்பார்த்துக் கேட்டான்.

கிணற்றிலிருந்த குருவி அரசனைப்பார்த்துச் சிரித்துக் கொண்டு, "அரசே, அரசே, நான் ஏன் சாகிறேன்! இங்கு சுகமாகத்தான் இருக்கிறேன்; நாட்டுப் பெண்களுக்குத் தண்ணீர் தூக்கிக் கொடுத்துக்கொண்டிருக்கிறேன்," என்று கூறிற்று.

அதைக் கேட்டதும் அரசனுக்கு உண்டான கோபத்திற்கு அளவேயில்லை. அவன் மிகுந்த பரபரப்புடன் வேலைக்காரரில் ஒருவனைத் தருவித்து, "அந்தக் குருவியைக் கிணற்றிலிருந்து எடுத்துக்கொண்டுபோய்ச் சமையற்காரியிடம்கொடுத்துச் சமைக்கச்சொல்," என்று உத்தரவளித்தான். அவன் அரசன் கட்டளையின்படியே கிணற்றிலிருந்து எடுத்துச் சமையற்காரியிடம் கொண்டுபோய்க் கொடுத்துச் சமைக்கச் சொன்னான்.

சமையற்காரி அந்தக் குருவியை வாங்கி, அங்கிருந்த கூடையின்கீழ் வைத்துவிட்டு அதை யறுப்பதற்காகக் கத்தியெடுத்துவரப் போனாள். அவள் போய்க் கத்தி கொண்டுவருவதற்குள் அந்தக் கூடையின்கீழிருந்த குருவி கூடையை மெதுவாகத் தள்ளிவிட்டுப் பறந்துபோய்க் கூரையில் ஒளிந்து கொண்டது.

சமையற்காரி கத்தியை யெடுத்துக்கொண்டுவந்து குருவியைப் பார்த்தாள். குருவியைக் காணோம். அவள் என்ன செய்வாள்? கையை முறித்துக்கொண்டாள்; காலைத் தரையில் உதைத்துக்கொண்டாள். இந்தச் சங்கதியை அரசனிடம் அறிவிக்கலாமோ என்று எண்ணினாள். பிறகு அரசன் கோபிப்பானே என்று பயந்தாள். சற்றுநேரம் யோசித்தாள். அதன் பிறகு அங்குக்கிடந்த குருட்டு நாய்க்குட்டியொன்றை எடுத்து

வந்து அறுத்துப் பக்குவமாகச் சமைத்து அரசனுக்குப் படைத்தாள்.

அரசன் அதைச் சாப்பிட்டுத் தன் மீசையை முறுக்கிக் கொண்டே, "சிட்டுக்குருவியே, சிட்டுக்குருவியே, செத் தாயோ அல்லது இன்னும் பிழைத்திருக்கிறாயோ?" என்று வெகு முடுக்குடன் கேட்டான்.

"நான் ஏன் சாகிறேன்! நான் சுகமாகவே இருக்கிறேன். நீதான் குருட்டு நாய்க்குட்டியைத் தின்றுவிட்டு வெகு முடுக் காகப் பேசுகிறாய். ஓ குருட்டு நாய்க்குட்டியைத் தின்ற ராஜாவே," என்று சொல்லிக்கொண்டே 'ஜிவ்' என்று பறந்து போயிற்று.



## 5. கொக்கு.

வெள்ளை வெளேரென்றிருக்கும் கொக்குகளைப் பார்த் திருக்கிறீர்களல்லவா? அந்தக் கொக்குகளிலொன்று சில குச்சி களைப் பொறுக்கிக்கொண்டுவந்து ஒரு சிறுவீடுகட்டி, முட்டை யிட்டுக்கொண்டு சுகமாகக் காலங்கழித்துவந்தது. அப்படி வாழ்கிற நாட்களிலே ஒருநாள் காற்றும் மழையும் கலந்து அடித்தது.

மழை காற்றோடு வெகு மும்மரமாகப் பெய்யும்போது ஒரு பூனையும், ஒரு காக்கையும், ஒரு சிட்டுக்குருவியும் கொக்கின் வீட்டிற்கு விருந்தாளிகளாக வந்தன. அவை களுக்குக் கொக்கு இடம் தந்து, தன் ஆகாரத்தில் கொஞ்ச மும் அவைகளுக்குக் கொடுத்தது. அவைகள் அந்த ஆகா ரத்தைத் தின்றுவிட்டு அந்தக் கொக்கின் வீட்டில் அன்றிரவு படுத்துறங்கின.

நடு ராத்திரியில் யாரோ ஒருவர் எதையோ மெல்லுகிற சத்தம் கேட்டது. உடனே கொக்கு எழுந்து, "இந்தச் சத் தம் எங்கிருந்து உண்டாயிற்று?" என்று தன்னுடன் படுத் திருப்பவர்களைக் கேட்டது.

பூனை எழுந்து, "நேற்று முறுக்கு வாங்கிச் சாப்பிட்டேன்; அதன் துண்டுகள் ஜீரணமாகாது மேல்நோக்கின; அவைகளை







இப்பொழுது நன்றாக மென்று விழுங்கினேன்," என்று பதில் சொல்லிற்று.

அந்தப் பதிலைக்கேட்டுச் சரிதான் என்று சொல்லிவிட்டு, அந்தக் கொக்கும் மற்றப் பறவைகளிரண்டும் படுத்து உறங்கின.

பொழுது விடிந்தது. சூரியன் 'கற கற' என்று பிரகாசித்துக்கொண்டே கிழக்கே வந்தான். சூரியனைக் கண்டதும் பூனையும் கொக்கும் காகமும் சிட்டுக்குருவியும் நித்திரை தெளிந்து எழுந்தன.

அவைகளிலே கொக்கானது தன் முட்டைகளில் நாலு குறைந்திருக்கக் கண்டது. உடனே காகத்தைப் பார்த்து, "முட்டைகளைப்பற்றி ஏதாவது உனக்குத் தெரியுமா?" என்று கேட்டது. "ஐயோ! நான் ஒன்றும் அறியேனே!" என்று காகம் பதில் உரைத்தது.

அதைக் கேட்டுக்கொண்டு சிட்டுக்குருவியைப் பார்த்து, "உனக்கு ஏதேனும் தெரியுமோ," என்று கேட்டது. அதுவும் தனக்கொன்றுந் தெரியாதென்றே சொல்லிவிட்டது. பிறகு பூனையைப் பார்த்துக் கேட்டது. அப்பொழுது அந்தப் பூனை, "முட்டையைக் கண்ணாலேகூட நான் பார்த்ததில்லையே! ஐயோ! பாவமே! எந்தப் பாவிகள் திருடினார்களோ!" என்றது.

மூன்றுபேரும் தமக்கு ஒன்றும் தெரியாது என்று சொல்லவும், அந்த மூவரையும் அழைத்துக்கொண்டு கங்கைக்கரைக்குப் போய், "நீங்கள் மூவரும் ஒவ்வொருவராக இதில் மூழ்கிச் சத்தியம் செய்துகொடுங்கள்," என்று கேட்டது.

முதலில் காகம் கங்கையில் இறங்கி, "ஓ கங்காதேவியே, கொக்கின் முட்டையை நான் திருடியிருந்தால் என்னை மிதக்கவிடாது அடித்துக்கொண்டுபோ; நான் திருடாதிருந்தால் மேலே தூக்கிவிட்டு என்னைக் காப்பாற்று," என்று சொல்லிற்று. கங்கை காகத்தை அடித்துக்கொண்டு போகாமல் மேலே மிதக்கச்செய்தது. காகம் சந்தோஷமாகக் கரையில் வந்து சேர்ந்தது.

காகம் கரையை அடைந்தவுடனே, சிட்டுக்குருவி ஆற்றில் இறங்கி, "ஓ கங்காதேவியே, என் அம்மையே, நான் கொக்கின் முட்டையைத் திருடியிருந்திருப்பேனேயானால் என்னை மேலே மிதக்கவிடாமல் அடித்துக்கொண்டுபோ; நான் திருடாதிருந்திருப்பேனேயானால் என்னை மேலே தூக்கிவிட்டு என்னைக் காப்பாற்று," என்று சொல்லிற்று. அதுகேட்டு கங்கை, சிட்டுக்குருவியின்மீது தவறு இல்லையே என்று மனத்தில் நினைத்து, அடித்துக்கொண்டு போகாமல் சிட்டை மேலே கிளப்பிவிட்டது. சிட்டுக்குருவியும் வெகு சந்தோஷத்தோடு கரையை அடைந்தது.

அதன்பின் பூனை இந்த இரண்டு பறவைகளும் மிதந்து வந்தாற்போலத் தானும் மிதக்கக்கூடும் என்று நினைத்து, கங்கையில் இறங்கி, "ஓ கங்காதேவியே, பகவதி, என் அம்மையே, நான் கொக்கின் முட்டையைத் திருடியிருப்பேனேயாகில், உண்டவீட்டிற்கு இரண்டகம் செய்திருப்பேனேயாகில், என்னைக் கரை சேர்க்காது அடித்துக்கொண்டுபோ;

அப்படித் திருடாத பரிசுத்தனுனல் என்னை மேலே தூக்கி விட்டுக் கரைசேர்," என்று சொல்லி மூழ்கினது. மூழ்கின பூனையைக் கங்காதேவி மேலே தூக்கிவிடாது அடித்துக் கொண்டுபோய்ச் சமுத்திரத்தில் சேர்த்துவிட்டாள்.



## 6. கோக்கும் அம்பட்டனும்.

ஒரு ஊரிலே அழகான கொக்கு ஒன்று இருந்தது. அது ஒருநாள் கழனியெல்லாஞ் சுற்றிக் கொஞ்சம் கடலை சம்பாதித்தது. அதன்பின் வயலெல்லாஞ் சுற்றிக் கொஞ்சம் வரகு கொண்டுவந்தது. அதற்குப்பிறகு ஊரெல்லாஞ் சுற்றிக் கொஞ்சம் துவரை சம்பாதித்துக் கொண்டுவந்தது. அதற்கு அப்புறம் களமெல்லாஞ் சுற்றினது; இப்படிக் களம்களமாகச் சுற்றிக் கொஞ்சம் கொள்ளு கொண்டுவந்தது.

இப்படித் தேடிக் கொண்டுவந்த நாலு வஸ்துக்களையும் தனித்தனியாக ஊறவைத்து உரலிலிட்டு ஆட்டிப் பிறகு

ஒன்ருகக் கூட்டி, அப்படிக் கூட்டப்பட்ட மாவோடு மிளகு, சீரகம், உப்பு முதலியவைகளைச் சேர்த்து வடைதட்டிச் சுட்டது.

இப்படித் தான் சுட்ட பெரிய வடையை எடுத்துக் கொண்டு ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொஞ்சம் கொஞ்சமாகப் பிட்டுத் தின்றுகொண்டிருந்தது.

அப்படித் தின்றுகொண்டிருக்கையில் பெரிய துண்டொன்று அங்கிருந்த மரப்பொந்தில் விழுந்துவிட்டது. "கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்ற பழமொழிப்படி தின்னுஞ்சமயத்தில் தவறி விழுந்துவிட்டதே என்று விசனப்பட்டுக்கொண்டிருந்தது.

அந்தச் சமயத்தில் அம்பட்டன் ஒருவன் அந்த வழியாகப் போய்க்கொண்டிருந்தான். அவனைப்பார்த்து, "ஐயா பண்டிதரே, ஐயா பண்டிதரே, கொஞ்சம் நின்று எனக்கு ஒரு உபகாரஞ் செய்யமாட்டீரோ? என்னுடைய வடைத் துண்டொன்று இந்த மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அதை என்னல் எடுக்க முடியவில்லை; நீர் கொஞ்சம் எடுத்துக் கொடும்." என்று கொக்கு கேட்டது.

அதற்கு அந்த அம்பட்டன், "கொக்காரே, கொக்காரே, நான் இந்த ஊர் மகாராஜாவுக்கு க்ஷௌரஞ் செய்யப் போகிறேன்; இப்பொழுது அந்தத் துண்டை எடுத்துக்கொடுக்கவும், நின்று உன்னுடன் வார்த்தையாடவும் நேரமில்லை," என்று சொல்லிப் போனன்.

தனக்கு அந்த வடைத்துண்டை எடுத்துக் கொடுக்கவில்லை என்னும் வருத்தத்தாலும் தன் சொல்லை அலக்ஷியஞ் செய்தான் என்னும் கோபத்தாலும் அவ்வூர் அரசனிடஞ் சென்று, "மகாராஜாவே, மகாராஜாவே, என்னுடைய வடைத் துண்டொன்று ஒரு மரப்பொந்தில் விழுந்துவிட்டது; அதை எடுத்துக் கொடுக்கும்படி தங்களுடைய அம்பட்டனைக் கேட்டேன்: அவன் என் சொல்லைக் காதில் வாங்காமல் வந்துவிட்டான். ஆனபடியினல் அவனை உதையுங்கள்," என்று சொல்லிற்று.

அரசன், "என் அம்பட்டனை நான் உதைப்பேனா? உதைக்கமாட்டேன் போ," என்று சொல்லிவிட்டான்.

அரசன் அப்படிச் சொல்லவும் கொக்கு அவனுடைய கிளியண்டையோடி, "ஓ கிளியே, கிளியே, என்னுடைய வடைத்துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை எடுத்துக் கொடுக்கும்படி அந்த வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக்கொடாமல் போய்விட்டான். அவன் அப்படி எடுத்துக்கொடாமற் போன சங்கதியை அரசனிடம் தெரிவித்து அவனை உதைக்கச் சொன்னேன். அரசன் உதைக்கமாட்டேன் என்கிறான். ஆனபடியினால் கிளியாரே அரசன் விரலைக் கடி." என்று சொல்லிற்று.

அதற்கு அந்தக் கிளி, "கொக்கே, கொக்கே, கூன்வளைந்த கொக்கே. என் அரசனையும் கடிப்பேனா? கடிக்கமாட்டேன் போ," என்று சொல்லித் துரத்திற்று.

கிளி அப்படிச் சொல்லவும் பூனையண்டை போய், "ஓ பூனையாரே, பூனையாரே, கண்மூடித் தவஞ்செய்யும் பூனையாரே, என்னுடைய வடைத்துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை எடுத்துக் கொடுக்கும்படி அந்த வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக்கொடாமற் போய்விட்டான். அப்படிப்போன சங்கதியை அரசனிடம் தெரிவித்து அவனை உதைக்கச் சொன்னேன். அரசன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற் போகவும் அவன் வளர்த்துவரும் கிளியண்டை போய் இந்தச் சங்கதியைச் சொல்லி அவனைக் கடிக்கச் சொன்னேன். கிளி மாட்டேன் என்கிறது. ஆனபடியினால் நீ அந்தக் கிளியைப் பிடித்துச் சற்றுக் கடி," என்று சொல்லிற்று.

அதற்கு அந்தப் பூனை, "எங்கள் அரசனுடைய கிளியை நான் கடிப்பேனா? நான் கடிக்கமாட்டேன்," என்று சொல்லிற்று.

பூனை அவ்விதமாகச் சொல்லவும், கொக்கு அந்த அரண்மனையிலே ஒரு கிழவியண்டை இருந்த அரசனுடைய நாயண்டை சென்று, "ஓ நாயே, நாயே, என்னுடைய வடைத் துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத்

துண்டை யெடுத்துக் கொடுக்கும்படி அந்த வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக்கொடாமல் போய்விட்டான். அவன் அப்படி எடுத்துக் கொடாமற் போன சங்கதியை அரசனிடம் தெரிவித்து அவனை உதைக்கச் சொன்னேன்; அரசன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற்போகவும் அவன் வளர்த்துவரும் கிளியண்டை போய் இந்தச் சங்கதியைச் சொல்லி அவனைக் கடிக்கச்சொன்னேன். கிளி கடிக்கவில்லை. கிளி கடியாமற்போகவும் பூனையண்டை போய் அந்தக் கிளியைக் கடி என்று சொன்னேன். அதுவும் கடிக்கமாட்டேன் என்று சொல்லுகிறது. ஆனபடியினால் நீ அந்தப் பூனையைக் கடி," என்று சொல்லிற்று.

அதற்கு அந்த நாய், "எங்கள் அரசனுடைய பூனையை, நான் கடிப்பேனோ? நான் கடிக்கமாட்டேன் போ," என்று சொல்லிற்று.

நாய் பூனையைக் கடிக்கமாட்டேன் என்று சொல்லவும் அந்த நாய்க்குச் சொந்தக்காரியான அரண்மனை வேலைக்காரக் கிழவியண்டை போய், "ஓ பாட்டியே, பாட்டியே, என்னுடைய வடைத்துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை யெடுத்துக் கொடுக்கும்படி அந்த வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக் கொடாமற் போய்விட்டான். அவன் அப்படி எடுத்துக் கொடாமற் போகவும் அந்தச் சங்கதியை அரசனிடம் தெரிவித்து அவனை உதைக்கச் சொன்னேன். அரசன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற் போகவும், அவன் வளர்த்துவரும் கிளியண்டை போய், இதையெல்லாம் தெரிவித்து அந்த அரசனைச கடிக்கச்சொன்னேன். அது கடிக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டது. உடனே அரண்மனையிலுள்ள பூனையண்டை போய்க் கிளியைக் கடிக்கச்சொன்னேன். தன் அரண்மனைக் கிளியைக் கடிக்கமாட்டேன் என்று அது சொல்லிவிட்டது. அதற்கு அப்புறம் உன் நாயண்டை வந்து பூனையைக் கடிக்கச்சொன்னேன். அதுவும் கடிக்கமாட்டேன் என்று சொல்லித் தீர்த்தது. ஆனபடியினால் பாட்டி உன் நாய்க்குச் சூடாகக் கஞ்சி வார்," என்று சொல்லிற்று.

அதற்கு அந்தப் பாட்டி, "கொக்கே, கொக்கே, வெண் கொக்கே, என் நாய்க்குக்கூடச் சூடாகக் கஞ்சி வார்ப்பேனே? நான் சூடாக வார்க்கவேமாட்டேன்," என்று சொன்னாள்.

அதைக் கேட்டுக்கொண்டு அந்தப் பாட்டியின் புருஷனை பாட்டனண்டை போய், "ஓ பாட்டனாரே, பாட்டனாரே, என்னுடைய வடைத்துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை யெடுத்துக் கொடுக்கும்படி அந்த வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக்கொடாமற் போய்விட்டான். அவன் அப்படியே எடுத்துக்கொடாமற் போகவும் அந்தச் சங்கதியை அரசனுக்கு அறிவித்து அவனை உதைக்கச் சொன்னேன். அரசன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற்போகவும் அவன் வளர்த்து வரும் கிளியண்டை போய் இதையெல்லாம் தெரிவித்து அந்த அரசனைக் கடிக்கச் சொன்னேன். அது கடிக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டது. அதற்கு அப்புறம் பூனையண்டை போய்க் கிளியைக் கடிக்கச் சொன்னேன். கிளியைக் கடிக்கமாட்டேன் என்று பூனை சொல்லிவிட்டது. பூனை அப்படிச் சொல்லவும் நாயண்டை வந்து பூனையைக் கடிக்கச் சொன்னேன். நாயும் மாட்டேன் என்று சொல்லிவிட்டது. நாய் என் சொல்லைக் கேளாமற்போகவும் அதை வளர்க்கும் பாட்டியண்டையோடி அந்த நாய்க்குச் சூடாகக் கஞ்சி வார்க்கச் சொன்னேன். பாட்டி அப்படிச் செய்யமாட்டேன் என்கிறாள். ஆனபடியினால் என் அன்பான பாட்டனாரே, தலையெல்லாம் என்னைப்போல வெளுத்துள்ள பாட்டனாரே, உன் பெண்சாதியைத் தடியெடுத்துச் சற்று என் மனஞ்சலிக்கவும் அவள் இடுப்பொடியவும் விசாரி," என்று சொல்லிற்று.

அதற்கு அந்தத் தலைவெளுத்த கிழவன், "கால் நீண்ட கொக்கே, என்னைப்போல முதுகுவளைந்த கொக்கே, பெண்சாதியை யடிக்கும் புருஷனுண்டோ? இல்லை. ஆனபடியினால் நான் என் அன்பான கிழவியை அடிக்கமாட்டேன்" என்று சொன்னான்.

கிழவன் அப்படிக் கைகழுவிவிடவும் நாலுபக்கமுஞ் சுற்றிப் பார்த்தது. அங்கொரு பசு கட்டியிருந்தது. அதனிடஞ் சென்று, "பசுவே, பசுவே, சாந்தமான பசுவே, தலையிற்

கொம்புள்ள பசுவே, என்னுடைய வடைத்துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை எடுத்துக் கொடுக்கும்படி அந்த வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் என் சொல்லைக் காதில் வாங்காமற் போய் விட்டான். அவன் அப்படிப் போகவும் அந்தச் சங்கதியை அரசனுக்கு அறிவித்து அவனை உதைக்கச் சொன்னேன். அரசன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற்போகவும் அவனுடைய கிளியண்டை போய் அந்த அரசனைக் கடிக்கச் சொன்னேன். அது கடிக்கமாட்டேன் என்றது. அதன்பிறகு பூனையண்டை போய்க் கிளியைக் கடிக்கச் சொன்னேன். அது கடிக்கமாட்டேன் என்று மறுத்துவிட்டது. பூனை அந்தக் கிளியைக் கடிக்கமாட்டேன் என்று சொல்லவும் நாயண்டை வந்து அந்தப் பூனையைக் கடிக்கச் சொன்னேன். நாய் பூனையைக் கடிக்கமாட்டேன் என்று சொல்லிற்று. நாய் கடியாமற் போகவும், அதை வளர்க்கும் பாட்டியண்டை வந்து, நாய்க்குச் சூடாகக் கஞ்சி வார்க்கச் சொன்னேன். பாட்டி அப்படி வார்க்கமாட்டேன் என்று சொல்லிவிட்டாள். பாட்டி அப்படிச் சொல்லவும், பாட்டனண்டை போய்ப் பாட்டியை அடிக்கச் சொன்னேன். பாட்டன் தன் பெண்சாதியை அடிக்க மாட்டேன் என்கிறான். ஆனபடியினால் பசுவே, உன் அழகிய கொம்புகளால் அந்தக் கிழவனைக் கொஞ்சம் முட்டித் தள்ளு," என்று வேண்டிக்கொண்டது.

அதற்கு அந்தப் பசு, "மீன் தின்னுங் கொக்கே, என்னை அன்பாக வளர்த்துவரும் கிழவனையும் முட்டுவேனோ? கிழவனை முட்டமாட்டேன் போ," என்று சொல்லித் துரத்திற்று.

பசு இப்படிச் சொல்லிவிடவும், அதன் கன்றினிடஞ் சென்று, "ஓ பசுவின் கன்றே, துள்ளி விளையாடுங் கன்றே, என்னுடைய வடைத்துண்டொன்று மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை எடுத்துத் தரும்படி அவ்வழியே போன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக்கொடாமற் போயினன். அவன் எடுத்துக்கொடாமற் போகவும் அரசனிடம் சங்கதியைச் சொல்லி அவனை உதைக்கச் சொன்னேன். அவன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற்போகவும், அவன் கிளியண்டை போய், அரசனைக் கடிக்கச் சொன்னேன். அது கடிக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டது.

அதற்குப்பிறகு பூனையண்டை போய்க் கிளியைக் கடிக்கச் சொன்னேன். அது அந்த வேலையைச் செய்யமாட்டேன் என்று சொல்லிற்று. அதற்கு அப்புறம் நாயண்டை போய்ப் பூனையைக் கடிக்கும்படி கேட்டேன். அது போ போ என்று சொல்லிவிட்டது. நாய் இப்படிச் சொன்னபிறகு பாட்டியண்டை போய் நாய்க்குச் சூடாகக் கஞ்சி வார்க்கச் சொன்னேன். அவள் மாட்டேன் என்றாள். அவள் சூடாகக் கஞ்சி வார்க்கமாட்டேன் என்று சொல்லவும், பாட்டனண்டை வந்து, பாட்டியை அடிக்கும்படி கேட்டேன். அவன் தன் பெண் சாதியை அடிக்கமாட்டேன் என்றான். இவன் தன் பெண் சாதியைத் தலைமேல் வைத்துக்கொண்டு அடிக்கமாட்டேன் என்று சொல்லவும், உன் தாயண்டை வந்து, நடந்த சங்கதியை ஆதியோடந்தமாகச் சொல்லி, அந்தக் கிழவனை முட்டும்படி சொன்னேன். அது முட்டமாட்டேன் என்று கூறிவிட்டது. ஆனபடியினால் நீயாவது அதன் மடிக்காம்பைக் கடி," என்று வேண்டிற்று.

கொக்கு என்னவேண்டியும் அந்தக் கன்று, "போ, போ, பித்தம்பிடித்த கொக்கே, என் தாயின் மடிக்காம்பை நான் கடிக்கமாட்டேன்," என்று கோபமாகச் சொல்லித் துரத்திற்று.

கன்றும் தான் இட்ட வேலையைச் செய்யமாட்டேன் என்னவும், அங்கிருந்த ஒரு பெரிய (மாட்டு) ஈயண்டை போய், "ஓ ஈயாரே, ஈயாரே, என்னுடைய வடைத்துண்டொன்று ஒரு மரப்பொந்தில் விழுந்துவிட்டது. அந்தத் துண்டை எடுத்துத் தரும்படி அவ்வழியேபோன அம்பட்டனைக் கேட்டேன். அவன் எடுத்துக்கொடாமற் போயினன். அவன் அப்படிப் போகவும் அரசனிடம் போய் அந்தச் சங்கதியைச் சொல்லி அவனை உதைக்கச் சொன்னேன். அவன் உதைக்கவில்லை. அரசன் உதையாமற்போகவும், அவன் கிளியண்டை போய், அரசனைக் கடிக்கச் சொன்னேன். அது கடிக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டது. அதற்குப்பிறகு, பூனையண்டை போய்க் கிளியைக்கடிக்கச் சொன்னேன். அது அந்த வேலையைச் செய்யத் தனக்கு இஷ்டமில்லை என்று சொல்லிற்று. அதற்குப்பின் நாயண்டை போய்ப் பூனையைக் கடிக்கும்படி கேட்டேன். அது போ போ என்று சொல்லி நாய் போலவே குரைத்துத் துரத்தியது. நாய் இப்படிச் சொல்ல

வும், பாட்டியண்டை போய், நாய்க்குச் சூடாகக் கஞ்சி வார்க்கச் சொன்னேன். அவள் மாட்டேன் என்முள். அவள் மறுத்துவிடவும் பாட்டனண்டை போய்ப் பாட்டியை அடிக்கும்படி கேட்டேன். அவன் தன் பெண்சாதியை அடிக்க மாட்டேன் என்ருன். அவன் அப்படிச் சொல்லவும், இந்தப் பசுவண்டை வந்து, அந்தக் கிழவனை முட்டும்படி வேண்டினேன். அது அந்தக் கிழப்பாட்டனை முட்டமாட்டேன் என்றது. அதற்குப்பிறகு அந்தப் பசுவின் கன்றண்டை என் கதையையெல்லாம் ஒப்பித்துத் தன் தாயின் காம்பைக் கடிக்கச் சொன்னேன். என் கதையையெல்லாம் கேட்டுங்கூடத் தன் தாயின் காம்பைக் கடிக்க உடன்படவில்லை. அதனுல் உன்னிடம் வந்தேன். என் சரித்திரத்தையெல்லாஞ் சொன்னேன். நீயாவது சற்று மனமிரங்கி அந்தக் கன்றின் காதில் நுழை," என்று சொல்லி வேண்டிற்று.

அதற்கு அந்த ஈ, "கொக்காரே, கொக்காரே, அவர்களெல்லாம் உன் சொல்லைக் கேளாவிட்டாலும் நான் கேளாதிருப்பது சரியல்ல. நான் உன் இனத்திற் சேர்ந்தவன். உன்னைப்போல எனக்குஞ் சிறகுண்டு. ஆனபடியினுல் உன் இஷ்டப்படியே கன்றின் காதில் நுழைகிறேன்," என்று சொல்லி நுழைந்தது.

ஈ கன்றின் காதில் நுழைந்து உபத்திரவஞ் செய்யவும், கன்றுனது தன் தாயின் காம்பைக் கடிக்க ஆரம்பித்தது; கன்று தன் காம்பைக் கடிக்கவும் பசு அந்த உபத்திரவம் பொறுக்கமுடியாமல் கிழவனை முட்டியது; கிழவன் உடனே பாட்டியை யடித்தான்; பாட்டி அடி பொறுக்கமாட்டாமல் சூடாக நாய்க்குக் கஞ்சி வார்த்தாள்; அந்தச் சூடான கஞ்சியைக் குடிக்க முடியாமல் நாய் பூனையைக் கடித்தது; உடனே பூனை கிளியைப் பிடித்தது; கிளிக்குக் கோபம் பிறந்து அரசன் கைவிரலைக் கடித்தது; அந்தக் கடி பொறுக்கமுடியாமல் அரசன் அம்பட்டனை உதைத்தான்; அந்த உதையைச் சந்தடி செய்யாமல் வாங்கிக்கொண்டுபோய் மரப்பொந்திலிருந்த வடைத்துண்டை யெடுத்துக் கொக்கினிடங் கொடுத்தான். கொக்கு களிப்புடன் வாங்கித் தின்று, சிறகை யடித்துக் கொண்டு பறந்துபோயிற்று.



## 7. ஆட்டுக்கடா.

ஒரு இடையன் தன் ஆட்டுமந்தையை ஓட்டிக்கொண்டு போய்த் தன்னூருக்கு அருகிலுள்ள காட்டிலும் அதிலுள்ள மலைகளிலும் அந்த மந்தை ஆடுகளை மேயவிடுவது வழக்கம். அந்த மந்தையோ வெகு ஆச்சரியகரமாக இருக்கும். ஒவ்வொரு ஆடும் ஒவ்வொரு நிறமுள்ளதாகவும், ஒவ்வொரு விதமான கொம்புகளையுடையதாகவும் இருக்கும். அந்த மந்தையில் ஒரு ஆட்டிற்கு ஒருமுழம் நீளமுள்ள தாடியிருந்தது. இவ்வளவு பெரிய தாடியுள்ள ஆடு மிகப்பெரியதென்று நினைக்கிறீர்களோ? அப்படி நினைக்கவேண்டாம்; பெரிய ஆடேயல்ல; ஒருசாண் நீளமுள்ள ஆடுதான் அது. அதன் கொம்புகளோ நீளமானதாகவும் முறுக்கேறப்பெற்றதாகவும் கூர்மையுள்ளதாகவும் இருக்கும். ஆட்டின் மயிரோ கன்னங்கரேலென்றிருக்கும். பார்வையோ காம்பீரமானதாயிருக்கும். இப்படிப்பட்ட தோற்றத்தையுடைய அந்த ஆட்டைப் பார்த்தால் எவர்க்கும் ஆச்சரியமாகவேயிருக்கும்.

இந்த ஆடும் அந்த மந்தையில் இருப்பதாகச் சொன்னேமல்லவா? இந்த ஆட்டையும் உடைய அந்த மந்தையை அந்த இடையன் மேய்த்துக்கொண்டு வருகையில் ஒருநாள் காற்றடித்து மழைபெய்தது. காற்றடித்து மழைபெய்யவும் எல்லா ஆடுகளும் அங்கும் இங்கும் ஓடித் தங்கின. நாம் மேலே சொன்ன தாடியாடுமாத்திரம் மற்ற ஆடுகளோடு மரத்தடியிற் றங்காது அருகிலிருந்த மலைக்குச் சென்று அங்கிருந்த குகையொன்றில் மழைக்கு ஒதுங்கியிருந்தது.

அந்த ஆடு தங்கியிருந்த குகையோ ஒரு பெரிய சிங்கத்திற்குச் சொந்தமானது. அந்தக் குகைக்குச் சொந்தக்காரனை மிருகராஜன் அப்பொழுது வெளியே போயிருந்தான். அந்தக் குகையில் மிருகராஜனை சிங்கம் வஸிக்கிறது என்னுஞ் சங்கதி அந்தத் தாடியாட்டிற்குத் தெரியாது.

அன்றெல்லாம் மழை விடாமற் பெய்தது. அதனுல் அந்த ஆடு அந்த இடத்தைவிட்டு நகர்வதற்கில்லை. அப்படியிருக்குஞ் சமயத்தில் சிங்கம் காட்டில் எதேச்சையாய்த் திரிந்துவிட்டுத் தன் குகைக்குத் திரும்பியது.

தன் குகையில் வேறொரு பிராணி தைரியமாக இருப்ப தைப் பார்த்துச் சற்றுத் திகில் அடைந்தது. அப்படி யடைந் தும் தன் தைரியத்தை விடாமல் அந்தத் தாடியாட்டைப் பார்த்து, "யார் நீ? இது என்னுடைய குகை என்பதை யறியா மல் வந்தாயோ? உன்னுடைய தைரியமே தைரியம்!" என்று சொல்லிற்று.

சிங்கத்தைப் பார்த்ததும் அந்த ஆட்டிற்குண்டான அச் சத்திற்கு அளவே கிடையாது. அதனோடு அதன் குரலைக்கேட் கவும் இடிவிழுந்தாற்போலாயிற்று. அப்படியிருந்தும் தைரி யத்தை விடாமல் எப்படியோ மனதைத் திடப்படுத்திக்கொ ண்டு சிங்கத்தைப்பார்த்து, "சிங்கமே வா; என்னருகில் வா. உனக்காக வெகுநேரமாகக் காத்துக்கொண்டிருக்கிறேன். நீ வாராமல்தான் என் விரதம் இதுவரை நிறைவேறாதிருந்தது. இப்பொழுது உன்னாலே என் விரதம் பூர்த்தியாவதைப் பார்க்க எனக்கு அதிக சந்தோஷமாக விருக்கிறது," என்று சொல் லிற்று.

அதைக்கேட்டுச் சிங்கம் மிகவும் ஆச்சரியத்தோடு, "நீ யார்? உன் விரதமென்ன?" என்று கேட்டது.

"என்னைத் தாடியாடுகோடு என்கிறார்கள். இப்படி என்னை அழைப்பது உனக்குத் தெரியாதா? நான் நூறு புலிகளையும் இருபத்தைந்து யானைகளையும் ஒரு சிங்கத்தையும் சாப்பிடுவ தாக விரதஞ்செய்துகொண்டேன். அப்படிச் செய்துகொண்ட விரதத்திற்கேற்ப நூறு புலிகளையும் இருபத்தைந்து யானைகளை யும் தின்றாயிற்று. சிங்கம் கிடைக்கவில்லையே என்று குகை குகையாகத் திரிந்துகொண்டே கடைசியில் இந்தக் குகைக்கு வந்தேன். வந்ததும் நீ அகப்பட்டாய். இன்றோடு என் விரதம் முடிகிறது. சற்று நீ யருகே வா," என்று சொல்லித் தன் தாடியை உருவிக்கொண்டே பாய யத்தனிப்பதுபோலப் பாவனைகாட்டி விறைத்துப் பார்த்தது.

அதைக்கண்டு அந்தச் சிங்கம் பீதியடைந்து வந்தவழியே திரும்பி யோட்டம்பிடித்தது. அந்த மிருகராஜனை சிங்கம் ஓடுவதைப்பார்த்து, ஒரு நரி, "அரசே, ஏன் இப்படி ஓடுகிறீர் கள்? என்ன அவசரம்? என்ன அவசரம்?" என்று கேட்டது.

"ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை" என்று சொல்லிக்கொண்டே பின்னும் ஓடிற்று.

அதன் பிறகேயோடி அந்த நரி, "நின்று சங்கதியைச் சொல்லுங்கள்; என்னால் ஆனவரையில் ஒத்தாசை புரிகிறேன்," என்றது.

அதைக்கேட்டுச் சிங்கம் சற்று நின்று, "என் குகையில் விரோதியொருவன் வந்திருக்கிறான். அவன் நூறு புலிகளையும் இருபத்தைந்து யானைகளையும் சாப்பிட்டு ஏப்பம் இட்டு ஆயிற்றும். இப்பொழுது ஒரு சிங்கத்தைச் சாப்பிடவேண்டுமாம். என்னைக் கண்டதும் அவனுக்குச் சந்தோஷம் பிறந்ததாம். அவன் சாண் அளவு நீளமுள்ளவனாகவும், ஒரு முழந் தாடியுள்ளவனாகவும், தலையில் இரண்டு கொம்புகளையுடையவனாகவும் இருக்கிறான். அவன் இவ்வளவு கூத்தெல்லாஞ் செய்கிறான்," என்று சொல்லிற்று.

"அரசே, நீர் மிருகங்களுக்கெல்லாம் அரசர். யானையை அடித்துக்கொல்லும் வலிவுள்ளவர். அப்படிப்பட்ட நீர் அந்தக் கபடமான ஆட்டிற்குப் பயந்தோ இப்படி ஓட்டம்பிடித்தீர்? நீர் சொல்லும் அடையாளத்தால் அந்தப் பிராணி ஆடென்றே தெரியவருகிறது. நம்மிருவருக்கும் இன்றையதினம் நல்ல ஆகாரம் கிடைத்தது. நாம் இருவரும் அவ்விடத்திற்குப் போவோம் வாரும்." என்று தைரியத்தை யுண்டுபண்ணத்தக்க வார்த்தைகளைச் சொல்லி, பயந்துகிடந்த சிங்கத்தை அழைத்துக்கொண்டு போயிற்று.

சிங்கம் நரியுடன் வருவதை ஆடு பார்த்தது. நரி தன் உண்மையான சங்கதியைச் சொல்லிச் சிங்கத்தை அழைத்து வந்திருக்கிறது என்று தெரிந்துகொண்டது. அப்படித் தெரிந்துகொண்டதோடு இனித் தன்னுயிர் தப்புவதும் அருமையானகாரியம் என்பதையும் அறிந்துகொண்டது. "இப்பொழுது உயிருக்கு ஆபத்து வந்துவிட்டது, ஆயினும் ஒரு கை பார்ப்போம்," என்று தனக்குள் ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு நரியைப்பார்த்து. "பேஷ், பேஷ். சேவகனென்றால் உனக்கே தகும். இவ்வளவு சீக்கிரத்தில் அழைத்துக்கொண்டு வந்துவிட்டாயே. எஜமானன் வேலையைத் தன்னுடையதாகச்

செய்து முடிக்க வல்லவேலைக்காரன் நீ ஒருவனே," என்று சொல்லி ஒருமுறை தன் தாடியை யுருவிக்கொண்டே விறைத்துப் பார்த்தது.

சிங்கம் தைரியமுள்ள மிருகமாயிருந்தும் ஆட்டின் கபட வார்த்தைகளைக் கேட்டுப் பயந்து ஓட்டம்பிடித்தது. நரி சற்று அந்த ஆட்டின் உருவத்தை யுற்று நோக்கிவிட்டு, அந்தச் சிங்கத்தின்பிறகே, "ஓ மகாராஜாவே, மகாராஜாவே, நில்லுங்கள் நில்லுங்கள்," என்று சொல்லிக்கொண்டே ஓடிற்று.

வெகு தூரம்வரையில் ஓடி, அதற்குப்பிறகு சிங்கம் திரும்பிப் பார்த்தது. நரியையன்றி வேறெவரும் தன் பிறகே வராதிருப்பதை யறிந்து, சற்றுத் தைரியமடைந்து நின்றது.

நரி அதனருகிற்சென்று, "மகாராஜாவே, இப்படியும் பயப்படலாமோ? சாமானியமான ஆட்டைக் கண்டு ஒரு மிருகராஜன் இப்படிப் பயந்தால் என்னையொத்தவர்கள் என்ன செய்வது? நான் முன்னே சொன்னபடி அது ஆடுதான். ஆட்டிலும் அது வெகு தந்திரமுள்ளது. நரிகட்குத்தான் தந்திரம் தெரியும் என்று சொல்லுகிறார்கள். அந்த நரிகளும்கூட இந்த ஆட்டினிடத்தில் படிக்கவேண்டும்போலிருக்கிறது. இது வெகு தந்திரமுள்ள ஆடு. இதைக்கண்டு மகாராஜாவாகிய தாங்கள் இப்படி மோசம்போதல் கூடாது. அதை ஒரு அறை கொடுப்பீர்களாயின் அது சுவர்க்கலோகம் போகுமே! அப்படிச் செய்வதை விட்டு இப்படி நடுங்குவது மிருகராஜனாகிய தங்கட்கு அழகோ? தயைசெய்து தங்கள் மனத்தினை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு என்னுடன் வரும்படி வேண்டுகிறேன்," என்று சொல்லி வேண்டிற்று.

அதற்கு அந்தச் சிங்கம், "நரியே, உன் குலத்தொழிலை என்னிடத்திற் காட்டுகிறாயோ? என்னைத் தந்திரமாக அழைத்துக்கொண்டுபோய் அந்தத் தாடியாடுகோட்டிற்கு இரையாக்கப் பார்க்கிறாயோ? நான் உன் தந்திரத்தை யறிவேன். உன்னுடன் வாரேன்," என்று சொன்னது.

அதைக்கேட்டு அந்த நரி, "தங்களை வஞ்சிப்பதாக எண்ணவே வேண்டாம். ஒருபோதும் நான் அப்படிச் செய்பவனல்லன். உண்மையாக அந்த மிருகம் ஆடே; வேறொன்றுமல்ல. தங்களுக்கு என் சொல்லில் நம்பிக்கை யில்லாவிட்

டால் என் வாலில் தங்கள் வாலைக் கட்டிவிடுகிறேன். நாமிரு வரும் ஒன்றுசேர்ந்து போவோம். தங்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டால் நானும் என் உயிரைத் தங்களோடு விடு கிறேன். இது சத்தியம்; கொஞ்சமும் யோசிக்கவேண்டாம்." என்று தைரியப்படுத்தி அதன் வாலைத் தன் வாலோடு கட்டி முடிந்துகொண்டு அந்தத் தாடியாடுகோடு இருந்த இடத்திற் குப் போய்ச் சேர்ந்தது.

அந்த ஆடு இப்பொழுது சிங்கம் வந்திருக்கும் விதத்தைப் பார்த்துச் சிங்கம் பயந்திருக்கிறதென்றும் அதற்குத் தைரியத் தைக் கொடுத்து இந்த நரி அழைத்துவந்திருக்கிறதென்றும் தெரிந்துகொண்டது. அதற்கு ஒரு புறம் பயம் அதிகமாக இருந்தது. இருந்தும் ஒருவாறு அதனை யடக்கிக்கொண்டு, அந்த நரியைப் பார்த்து, "நரியே, நீ நல்ல சேவகன்; வெகு நல்ல சேவகன். உன்னைப்போல உண்மையான சேவகன் கிடைப்பது அருமையிலும் அருமையே! என் பசியையறிந்து, என் விரதத்தையறிந்து, இவ்வளவு பெரிய காரியத்தை இவ் வளவு சீக்கிரத்தில் செய்து முடித்துக்கொண்டுவந்த உனக்கு என்ன பதிலுதவி செய்வது என்பதைப்பற்றிய யோசனை எனக்கு அதிகமாகவிருக்கிறது. அழைத்துக்கொண்டு வா என்றதற்கு, 'கட்டிக்கொண்டே வந்துவிடுகிறேன்' என்று சொல்லிப்போன நீ, சொன்னசொற்படியே கட்டிக்கொண்டு வந்ததற்காகவே சந்தோஷப்படுகிறேன். சற்று அந்த இடத் திலேயே நில்லு. ஒரே பாய்ச்சல் பாய்ந்து சிங்கத்தை யடித்து என் விரதத்தை முடிக்கிறேன்," என்று சொல்லி உண்மையா கப் பாய்வதுபோலப் பாவனை காட்டிற்று.

அதைக்கண்டு அந்தச் சிங்கம் பயந்து வந்தவழியே ஓடி ற்று. நரி சிங்கத்தின் வாலில் கட்டுண்டிருந்தபடியினாலே, சிங்கம் விரைவாக ஓடுகையில் முள்ளிலும் கல்லிலும் மேட்டி லும் பள்ளத்திலும் நரி இழுக்கப்பட்டு உதிரம் ஆறுகப் பெரு கும்படி உடம்பெல்லாம் காயமடைந்து செத்தது.

முழந்தாடியுள்ள அந்த ஆடோ அன்றிரவெல்லாம் களிப் புடன் அந்தக் குகையில் இருந்துவிட்டு, மறுநாள் காலையில் மறைவிட்டதும் தன் மந்தையோடு போய்ச் சேர்ந்தது.





## 8. டும்டும் குரங்கு.

ஒரு ஊரிலே 'இராமன்' என்னும் பெயருள்ள குரங்கொன்று இருந்தது. அதன் வால் மற்றக் குரங்குகளின் வாலைப் போன்றில்லை; சற்று நீளமாகவே இருந்தது. அது ஒருநாள் காடெல்லாம் திரிந்து தனக்கு வேண்டிய பழவர்க்கங்களை யறுத்துத் தின்றது. அப்படி மரங்கள்தோறும் ஏறியேறிப் பழங்களை யறுத்துத்தின்கையில் ஒரு முள்ளுள்ள மரத்திலும் ஏறிற்று. அதிலிருந்த முட்களிலொன்று அக்குரங்கின் வாலில் தைத்தது. அதனால் அக்குரங்கு இரண்டு மூன்று நாளாக மிகவும் வாதனைப்பட்டுக்கொண்டிருந்தது.

அப்படியிருக்கையில் ஒருநாள் ஒரு அம்பட்டன் அக்குரங்கிருக்கும் வீதியே போய்க்கொண்டிருந்தான். அவனைப் பார்த்து அக்குரங்கு, "ஓ *சிரஞ்சீவியே, சிரஞ்சீவியே, என் வாலில் முள் தைத்திருக்கிறது; அது மிகவும் வலியெடுக்கிறது.

*சிரஞ்சீவி = சிரத்தைச் சீவுபவன்; அம்பட்டன்.

உன் முள்வாங்கியினல் சற்று அதை எடுத்து என் வாதனையை நீக்கமாட்டாயோ?" என்று கேட்டது.

அக்குரங்கு தன் பல்லையெல்லாங் காட்டி இரக்கந் தோன்றும்படி கேட்கவும், அச்சிரஞ்சீவி தன் முள்வாங்குங் கத்தியினல் வாலை மெதுவாகத் தோண்டினன். அந்த முள் வெகு ஆழத்தில் இருந்தது. அதனல் கொஞ்சம் கொஞ்சமாகத் தோண்டிக்கொண்டே வந்தான். அப்படித் தோண்டிக்கொண்டே வந்தபடியினல் வாலின் நுனி கொஞ்சம் அறுபட்டுவிட்டது.

வால் அறுபடவும் அந்தக் குரங்கு, "என் வாலை யறுத்துவிட்டாயே! என் வாலைக் கொடு," என்று மன்ருடியது.

"முள்ளை யெடுப்பதற்காக அந்த வாலை அறுக்கவேண்டியதாயிற்று. இப்பொழுது வாலைக்கேட்டால் எப்படிக் கொடுக்க முடியும்?" என்று அம்பட்டன் சொன்னன்.

"ஆனல் என் வாலுக்குப் பதிலாக உன் கத்தியைக் கொடு," என்று கேட்டது.

அந்தக் குரங்கோடு வாதிட மனம் இல்லாதவனய் அந்த அம்பட்டன் தன் கத்தியைக் கொடுத்துவிட்டுப் போனன்.

அந்தக் கத்தியை வாங்கிக்கொண்டு குரங்கு சிறிதுதூரம் நடந்து சென்றது. அங்கே ஒரு பெண் விறகு ஒடித்துக்கொண்டிருந்தாள். அவளைப்பார்த்து, "அம்மா, அம்மா, குழந்தையே, உன் கையெல்லாம் சிவந்துவிட்டதே! இப்படிச் சிவக்கும்படி சுள்ளிகளைக் கையினல் ஏன் ஒடிக்கிருய்? நான் கத்தி தருகிறேன்; இந்தக் கத்தியால் வெட்டித்தள்ளு," என்று மிகப் பரிதாபமாகச் சொல்வதுபோலச் சொல்லிற்று.

அந்தப்பெண், இந்த அயோக்கியக் குரங்கை மிகவும் யோக்கியமான குரங்கென்று எண்ணி, அதனிடமிருந்து கத்தியை வாங்கி விறகு வெட்டினள். அம்பட்டனுடைய கத்தி விறகு வெட்டலுக்குத் தாங்குமா? தாங்காதே. ஆனபடியினல் அது ஒடிந்துவிட்டது. அந்தப்பெண் சுள்ளிகளை யொடித்துக் கட்டாகக் கட்டும்வரையில் சும்மாவிருந்துவிட்டுப் பிறகு அப்பெண்ணைப் பார்த்து, "நீ வெகு நல்லபெண் என்று நினைத்து என் கத்தியைக் கொடுத்து விறகு வெட்டச்சொன்

னேன். நான் அன்புடன் கொடுத்ததை நினையாமல் என் கத்தியை ஒடித்துவிட்டாய். இப்பொழுது என் கத்தியைப் போல வேறொரு கத்தியாவது கொடு; அல்லாவிடில் உன் விறகுச் சுமையையாவது கொடு," என்று வம்பு பண்ணினது.

அதைக்கேட்டு அப்பெண், "நீ யோக்கியன் என்றல்லவோ நினைத்தேன். நீ இப்படிப்பட்ட அயோக்கியன் என்பதை அறிந்திருப்பேனேயாகில் உன் கத்தியை வாங்கியே யிருந்திருக்கமாட்டேன். வேறு கத்தி என்னிடத்தில் இல்லை. இந்த விறகுக்கட்டை யெடுத்துக்கொண்டு ஒழிந்துபோ," என்று சொல்லி விறகுக்கட்டைக் கொடுத்துத் துரத்தினாள்.

இரண்டாம்முறையும் தான் வெற்றியடைந்ததை நினைத்து மனம் பூரித்து, விறகுக்கட்டை வாங்கித் தலைமீது வைத்துக் கொண்டு அக்குரங்கு சிறிதுதூரம் நடந்து சென்றது.



குரங்கு களிப்புடன் நடந்து செல்லுகையில், ஒரு ஒற்றடிப் பாதையோரத்தில், ஒரு கிழவி இரண்டொரு சுள்ளிகளுடன் அப்பஞ் சுட்டுக்கொண்டிருந்தாள். அவளைப்பார்த்து அக் குரங்கு, "பாட்டி, பாட்டி, நீ இந்தச் சுள்ளிகளோடு அப்ப

த்தை எப்படிச் சுடுகிறுயோ, அதிற்கொஞ்சம் தித்திப்பை எப்படி நுழைக்கிருயோ தெரியவில்லையே. நீ இப்படிக் கஷ்டப்படுவது என் மனத்திற்கு வருத்தமாகவிருக்கிறது. நீ இந்த விறகுக்கட்டை வைத்துக்கொண்டு அப்பஞ்சுடு," என்று சொல்லிற்று.

அதன் மாயப்பேச்சினை மெய்யென்று நம்பி அந்தப் பாட்டி அதனிடமிருந்து விறகை வாங்கி, பரபரப்புடன் அப்பத்தைச் சுட்டு அடுக்கினள்.

அப்பமெல்லாஞ் சுட்டானதும் அக்குரங்கு பாட்டியைப் பார்த்து, "பாட்டி, பாட்டி, என் விறகையெல்லாம் எரியவிட்டு அப்பத்தைச் சுட்டுவிட்டாயே. இப்பொழுது நான் விறகுக்கு என்செய்வேன்? நீ என் விறகையாவது கொடு; அல்லது இந்தக் கூடை தோசையையாவது கொடு," என்று கேட்டது.

"நான் கடைசிச் சுள்ளியை எரியவிடும்மட்டும் நல்லவன் போல் வாயை மூடிக்கொண்டிருந்தாயே. எல்லாம் முடிந்தானதும் என்னுடன் வாதிடுகிருயோ? சரி தொலைத்துக்கொள்," என்று சொல்லிக் கூடை தோசையையுங் கொடுத்தாள்.

அதை வாங்கிக்கொண்டு சிறிதுதூரம் நடந்தது. அங்கே ஒரு கிழவி தன் மகளுடன் பசியால் வருந்தினவளாய் வயிற்றைப் பிசைந்துகொண்டேயிருந்தாள். அவளைப்பார்த்து, "பாட்டியே, பாட்டியே, ஏன் இப்படிப் பசியுடன் வருந்துகிருய்? உண்பதற்கு ஒன்றும் உனக்குக் கிடைக்கவில்லையா? அப்படி ஒன்றும் அகப்படாவிட்டால் என்னிடத்தில் ஒரு கூடை தோசையிருக்கிறது; நீயும் உன் மகளும் வேண்டிய அளவு எடுத்துப் புசியுங்கள்," என்று வெகு அன்புள்ளது போலச் சொல்லியது.

இக்குரங்கின் மாயப்பேச்சில் நம்பிக்கைவைத்து அக்கிழவி தன் மகளுடன் உட்கார்ந்து, அக்குரங்கை வாயார வாழ்த்திவிட்டு, வயிருர அந்தத் தோசையையெல்லாம் பிட்டுப் பிட்டுத் தின்ருள்.

கிழவியும் மகளும் தோசையைத் தின்று முடிந்ததும், அக்குரங்கு அப்பாட்டியைப்பார்த்து, "பாட்டி, பாட்டி, சொன்னதே போதுமானதென்று தோசையையெல்லாம் சீராகத் தின்று

விட்டாயே. இப்பொழுது நான் என்செய்வது? என் தோசை யைத் திரும்பவும் எனக்கே கொடுத்துவிடு. அப்படிக் கொடுப்ப தற்குக் கூடாதாகில் உன் மகளையாவது கொடு," என்று சொல் லிக் கிழவியைத் தொந்தரவு செய்தது. கிழவியானவள் குரங் கின் உபத்திரவத்திற்கு அஞ்சித் தன் மகளைக் குரங்கோடு கூட்டியனுப்பினாள்.

மிகுந்த சந்தோஷத்துடன் அக்குரங்கு அப்பெண்ணைக் கூட்டிக்கொண்டு சிறிதுதூரம் மேற்கே நடந்துபோயிற்று. அப்படி நடந்துசெல்லும் வழியில் கழைக்கூத்தாடி யொரு வன் தனியாகக் கழைக் கம்பத்தின்மீது ஏறி விளையாடிக் கொண்டிருந்தான். அப்படி விளையாடுபவனைப் பார்த்து, "அப்பா கழைக்கூத்தரே, என் தனியாக விளையாடுகிறீர்? உமக் குத் துணையாக ஒருவரும் இல்லையோ? யாரையாவது கம்பத் தின் மீது ஏற்றிவிட்டு நீர் அடியிலிருந்துகொண்டு பறையடித் தால் நன்றாகவிருக்குமே. பறையின் சத்தத்தைக் கேட்டு ஜனங்கள் திரள் திரளாக வந்து உன் ஆட்டத்தைப்பார்த்து மகிழ்ந்து பொருள் கொடுப்பார்களே," என்று சொல்லிற்று.

அதைக்கேட்ட கழைக்கூத்தன், "இராமர் சேனைத்தலை வனே, நீ சொல்வதெல்லாஞ் சரியே. நீ சொல்லுகிறபடி எனக் குத் துணை யொருவரும் இல்லையே. துணையிருந்தால் நன்றா கத்தானிருக்கும். துணையில்லாமையால் தனியாக விளையாடு கிறேன்," என்று சொன்னான்.

"அப்படியா சங்கதி! நீ நல்லவன்போல் காணப்படுகிற படியால் என்னுடைய பெண்ணை உனக்குச் சிலகாலம் தருகி றேன். அவளுக்கு உன் வித்தையைக் கற்பித்துப் பணஞ் சம் பாதித்துப் பிழை," என்று சொல்லித் தன் வசத்தில் இருந்த பெண்ணை அவன் வசமளித்தது.

அவன் மிகுந்த களிப்புடன் அப்பெண்ணைத் தன்னருகில் அழைத்துக் கழைக்கம்பத்தில் ஏறும் விதத்தினை அப்பெண் ணிற்குச் சொல்லிக்கொடுத்து அவளைக் கழைக்கம்பத்தின் மீது ஏற்றினான். அப்பெண், என்றும் அவ்வளவு பெரிய கொம் பின்மீது ஏறியறியாதவளாகையினாலே, பயத்தின் மிகுதியால்

கால்தவறி அம்மூங்கிற் கம்பத்திலிருந்து கீழேவிழுந்து இறந்தாள். முப்பது அல்லது நாற்பது அடி உயரத்திலிருந்து ஒருத்தி விழுந்தால் அவள் பிழைப்பதும் உண்டோ?

அப்பெண் கீழே விழுந்திறக்கவும் அக்குரங்கு வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு, "என் மகளைக் கொன்றுவிட்டாயே மாபாவி!" என்று சொல்லியழுதது. அதன்பிறகு அவனைப்பார்த்து, "என் மகளை எழுப்பிக்கொடு" என்று வம்பு பண்ணினது. அங்கம்பூம்பாவையை யெழுப்பிய ஞானசம்பந்தராயின் அப்பெண்ணை எழுப்பிக்கொடுக்க முடியும். இந்த ஏழைக் கழைக்கூத்தன் என்னசெய்வான் பாவம்! வாயைப் பிளந்துகொண்டு நின்றான். "என் மகளைத் திரும்பவும் எழுப்பிக்கொடுக்க முடியாவிட்டால், உன்னிடத்துள்ள பறையையாவது கொடு," என்று கேட்டது.

இவ்வளவோடு விட்டாற்போதும் என்று நினைத்து அக்கழைக்கூத்தன் பறையைக் கொடுத்து நாலு கும்பிடும் போட்டு அனுப்பினான்.

அந்த மேளத்தை வாங்கிக்கொண்டு சிறிதுதூரம் சென்றது. அங்கே குளத்தருகில் ஒரு பெரிய ஆலமரம் இருந்தது. அம்மரத்தின்மீது ஏறிக்கொண்டு, "வாலுபோய் கத்தி வந்தது டும் டும்; கத்திபோய் விறகு வந்தது டும் டும்; விறகுபோய் அப்பம் வந்தது டும் டும்; அப்பம்போய் பெண் வந்தது டும் டும்; பெண்போய் மேளம் வந்தது டும் டும், டும் டும்," என்றடித்து அம்மேளத்தையுங் கிழித்தெறிந்தது.

இப்படியே சிலர் பலவிதமான துஷ்ட காரியங்களைச் செய்து, ஒன்றைவிட மற்றொன்று சிலாக்கியமாக விருக்கிறதென்று நினைத்துச் சந்தோஷிப்பது வழக்கம்.



## 9. கோழியும் அதன் குஞ்சுகளும்.

ஓர் ஊரிலே அழகான கோழி யொன்றிருந்தது. அது ஒரு சமயத்தில் நாலு பெரிய முட்டைகளையிட்டது. அதற்கு அப்புறம் அடைகாத்துக் குஞ்சு பொரித்தது. அந்த நாலு முட்டைகளிலிருந்து நான்கு அழகான குஞ்சுகள் வெளியே



வந்தன. அந்தக் குஞ்சுகளில் முதலில் வந்த குஞ்சுக்கு 'இராதைக்கிளி' என்றும், இரண்டாவதாக வெளியேவந்த குஞ்சுக்கு 'இரத்தினக்கிளி' என்றும், மூன்றுவதாக வெளியே வந்ததற்கு 'துரைசானிக்கிளி' என்றும், கடைசியில் வந்த தற்கு 'இராஜாத்திக்கிளி' என்றும் பெயரிட்டு வளர்த்து வந்தது.

'இராதைக்கிளி' என்று அது அழைத்தவுடனே பெரிய குஞ்சு ஓடிவரும்; 'இரத்தினக்கிளி' என்றவுடனே இரண்டா வது குஞ்சு வரும்; 'துரைசானிக்கிளி' என்றதும் மூன்றுவது குஞ்சு வரும்; 'இராஜாத்திக்கிளி' என்றதும் நாலாவது குஞ்சு ஓடிவரும். இப்படி அன்புடன் அவைகளை அழைத்துத் தான் அருந்தும் தானியம் முதலியவைகளை அவைகளுக்குக் கொடுத்து வளர்த்துவந்தது. தான் இரைதேட வெளியே போகும்போது தன் வீட்டுக்கதவைச் சாத்தித் தாழிடும்படி சொல்வதோடு யார்வந்து தட்டினபோதிலும் திறக்கவேண்டா மென்றும் சொல்லிவிட்டுப் போவது வழக்கம். இரைக்குச் சென்ற தாய்க்கோழி இரையைத் தேடிக்கொண்டு வீடுவந்த தும், "இராதைக்கிளி கதவைத் திற; இரத்தினக்கிளி கதவைத் திற; துரைசானிக்கிளி கதவைத் திற; இராஜாத்திக்கிளி கத

வைத் திற" என்று சொல்லிக் கதவைத் தட்டும். நம்முடைய தாய்தான் நம்மை அழைக்கிருளென்று அவை வந்து கதவைத் திறக்கும்.

இப்படிப் பலநாள் நடந்துகொண்டுவந்தது. ஒருநாள் ஒரு திருடன் கோழி கதவைத் தாழிட்டுக்கொள்ளச் சொல்லி விட்டு வெளியே போவதையும், வெளியேபோய் வந்தபிறகு குஞ்சுகளின் பெயரைச்சொல்லி அழைப்பதையும், அப்படி அழைத்தவுடனே அவைகள் கதவைத் திறப்பதையும் கூர்மையாகப் பார்த்துக்கொண்டிருந்து, மறுதினம் தாய்க்கோழி இரைக்காக வெளியேசென்றசிறிது நேரத்துக்கெல்லாம் அவைகளின் பெயரைச்சொல்லி யழைத்தான்.

அவைகள், தன் தாய் சீக்கிரமாக வீட்டுக்கு வந்துவிட்டாள்என்னும்களிப்போடுவந்து கதவைத்திறந்தன. உடனே அவன் அவைகளைப் பிடித்துத் தன் பையில் போட்டுக் கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தான்.

தாய்க்கோழி வீடுவந்ததும் தன் குஞ்சுகளைக் காணுமல் மனம்வருந்தி இரையொன்றும் எடாமல் அண்டை அயலிலுள்ள வீடுகள்தோறும் நுழைந்து, "இவ்விடத்தில் என் இராதைக்கிளி இருக்கிறதா? என் இரத்தினக்கிளி இருக்கிறதா? என் துரைசானிக்கிளி இருக்கிறதா? என் இராஜாத்திக்கிளி இருக்கிறதா? இவைகளை நீங்கள் பார்த்ததுண்டோ?" என்று கேட்டது. அவர்களெல்லாம், "நாங்கள் பார்க்கவில்லை; நாங்கள் பார்க்கவில்லை," என்றே சொன்னுர்கள்.

இப்படி கேட்டுக்கொண்டேபோய்க் கடைசியில் தன் குஞ்சுகளிருக்கும் திருடன் வீட்டண்டை வந்து அழைத்தது. குஞ்சுகள் ஓடிவந்தன. அவைகளைப் பார்த்துச் சந்தோஷப்பட்டு, ஒருமுறை அழுதுவிட்டு, அவைகளைத் தரும்படி அந்தத் திருடனைக் கேட்டது. அவன் அந்தக் குஞ்சுகள் தன்னுடையவையென்றும் அவைகளைக் கொடுக்க முடியாதென்றும் சொல்லித் துரத்தினுன்.

அதற்கு அப்பால் அக்கோழி அரசனிடஞ் சென்று தன் குஞ்சுகளை இன்ன இடத்திலுள்ள இன்னுன் திருடினுனென்று சொல்லி முறையிட்டது.



அரசன் தாய்க்கோழி தன் குஞ்சுகளைவிட்டுப் பிரிந்து படும்பாட்டைப் பார்த்துச் சகிக்க முடியாதவனாய், அந்தத் திருடனைக் குஞ்சுகளுடன் வரவழைத்து, அக்குஞ்சுகளை அப் பெட்டைக்கோழியினிடம் கொடுத்துவிடும்படி கட்டளையிட்டான்.

அதற்கு அந்தத் திருடன், "மகாராஜாவே, இக்குஞ்சுகள் என்னுடையவை. வெகுநாளாக இவைகளை வளர்த்துவருகிறேன்," என்று சொன்னான்.

அரசன் பெட்டைக்கோழியைப் பார்த்து, "இவன் இக் குஞ்சுகளைத் தன்னுடையவை என்று சொல்லுகிறானே; அவை உன்னுடையவை என்பதற்கு ஏதேனும் சாக்ஷியுண்டோ?" என்று கேட்டான்.

"அரசே. அவைகள் என்னுடையவைகளே; என்னுல் அடைகாக்கப்பட்டுப் பொரிக்கப்பட்டவைகளே. அவைகளை அவன் தனதென எப்படிச் சொல்லமுடியும்? பெரிய குஞ்சுக்கு 'இராதைக்கிளி' என்றும், இரண்டாவது குஞ்சுக்கு 'இரத்தினக்கிளி' என்றும். மூன்ருவது குஞ்சுக்கு 'துரைசானிக்கிளி' என்றும், நான்காவது குஞ்சுக்கு 'இராஜாத்திக்கிளி' என்றும் பெயரும் இட்டிருக்கிறேனே! அந்தப் பெயர்களைச் சொன்ன மாத்திரத்தில் அவைகள் என்னிடம் ஓடிவருமே! அப்படிப் பட்ட குஞ்சுகளை என்னுடையவையல்ல என்று சொல்லுகிறீர்களே," என்று சொல்லி வருத்தப்பட்டது.

அதைக்கேட்ட அரசன், "அப்பெயர்களைச் சொல்லி ஒவ்வொன்ருக அவைகளை அழை பார்ப்போம்," என்று பெட்டைக்கோழிக்குக் கட்டளையிட்டான்.

அவன் கட்டளைப்படி பெட்டைக்கோழி, "இராதைக் கிளியே!" என்று பெரிய குஞ்சினை யழைத்தது. உடனே பெரிய குஞ்சு திருடனிடமிருந்து தாயண்டை யோடிவந்தது. அதற்குப்பிறகு இரத்தினக்கிளியைக் கூப்பிட்டது. அதுவும் அப்படியே வந்தது. அதன்பிறகு, "துரைசானிக்கிளியே!" என்றது. துரைசானிக்கிளியும் ஓடிவந்தது. கடைசியில் இராஜாத்திக்கிளியை யழைத்தது. அந்தச் சிறிய குஞ்சு அதிக மகிழ்ச்சியுடன் தாயினிடம் வந்து சேர்ந்தது.

இவைகளையெல்லாம் பார்த்திருந்த அரசன் திருடனை நோக்கி, "நீ அவைகளின் பெயரைச்சொல்லி யழை," என்ருன்.

அவன் அப்படியே பலமுறை, "இராதைக்கிளி" என்றும், "இரத்தினக்கிளி" என்றும், "துரைசானிக்கிளி" என்றும், "இராஜாத்திக்கிளி" என்றும் அழைத்தான் அவன் என்ன அழைத்தும் அவைகள் அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. அவை திரும்பிப் பாராமற்போகவும் அவன் தலைகுனிந்து கொண்டான்.

அதற்குப்பிறகு அரசன் அக்குஞ்சுகளை அழைத்துக்கொண்டு போகும்படி பெட்டைக்கோழிக்கு உத்தரவு செய்துவிட்டு, கோழி திருடிய குற்றத்திற்காகவும், இராஜசபையில் பொய்பேசிய குற்றத்திற்காகவும் அந்தத் திருடனைத் தண்டித்தான்.

குஞ்சுகள் தன் தாயுடன் வீடுபோய்ச் சேர்ந்தன. வீட்டினை யடைந்ததும் பெட்டைக்கோழி தன் குஞ்சுகளைப் பார்த்து, "தாயாகிய என்னுடைய பேச்சைக் கேளாமையால் பிறர்கையில் அகப்பட்டுக் கஷ்டப்பட்டீர்கள். நீங்கள் என்னுடைய பேச்சைச் சரியாகக் கேட்டிருந்திருப்பீர்களாகில் கதவைத் தட்டினவர்களுடைய குரலை நன்றாகக் கவனித்திருப்பீர்கள். கவனித்திருந்தால் இவ்வளவு கஷ்டம் நமக்கு சம்பவியாதே. இனியாவது எச்சரிக்கையாக விருங்கள்," என்று புத்திசொல்லித் தான் கொண்டுவந்து வைத்திருந்த தீனியை அவைகட்கு ஊட்டிற்று.



## 10. கோசுகு.

நீங்களெல்லோரும் கொசுகைப் பார்த்திருப்பீர்களல்லவா? நீங்களெல்லோரும் பார்த்துள்ள கொசுகின் இனத்தைச்சேர்ந்த பெரிய கொசுகு ஒன்று ஒருகாலத்தில் இருந்தது. அந்தப் பெரிய கொசுகு கலியாணஞ் செய்துகொள்ளவேண்டுமென்று ஒருநாள் ஆசைப்பட்டது. எல்லோரும் நல்ல புருஷரைத் தாமே தேடிக் கலியாணஞ் செய்துகொள்ளும்போது நாம்மாத்திரம் அப்படிச் செய்யாமல் ஏன் சும்மா இருக்கவேண்டுமென்று எண்ணினதுபோலும்.

கலியாணஞ் செய்துகொள்ளவேண்டும் என்னும் எண்ணம் உண்டாகவும், நல்ல புருஷனைத் தேடுதற்காகக் கூடை கூடையாகச் சுகியமும், தட்டு தட்டாகத் தட்டுப்பணியாரமும் சுட்டு எடுத்துக்கொண்டு காஞ்சிபுரம்போகப் புறப்பட்டது.

சுகியக் கூடையோடும் பணியாரத் தட்டுடனும் புறப்பட்டுப்போகையில் வழியில் ஒரு ஆண்கொசுகு சந்தித்தது. அப்படிச் சந்தித்த ஆண்கொசுகு பெண்கொசுகைப் பார்த்து, "பெண்ணே, பெண்ணே, இவைகளைத் தூக்கிக்கொண்டு எங்குப் போகின்றாய்?" என்று கேட்டது.

அதற்கு அப்பெண்கொசுகு, "நல்ல புருஷனைத் தேடுவதற்காகக் காஞ்சிபுரம் போகிறேன்," என்றது.



"இதற்காகவா அவ்வளவுதூரம் போகிறாய்? சிரமம் இல்லாமல் என்னைக் கலியாணஞ் செய்துகொள்ளுகிறதுதானே?" என்று ஆண்கொசுகு கேட்டது.

"உனக்கோ கோணற்கால்; உன்னை நான் கலியாணஞ் செய்துகொள்ளமாட்டேன்." என்று மறுத்துவிட்டது.

அதற்கு அப்புறம் சிறிதுதூரஞ் சென்றது. அப்படிச் சென்றுகொண்டிருக்கையில் கழுதை யொன்று எதிரில் வந்தது. எதிரில் வந்த கழுதை, "கொசுகாரே, கொசுகாரே,

எங்கே இந்தக் கோலத்துடன் செல்லுகிறீர்?" என்று கேட்டது.

"நான் எனக்கேற்ற மணவாளனைத் தேடிக்கொண்டு காஞ்சிபுரம் போகிறேன்," என்று கொசுகு பதிலளித்தது.

"இவ்விடத்திலெல்லாம் புருஷன் கிடைக்கவில்லையென்றா காஞ்சிபுரம் போகிறாய்? என்னைவிட வேறு மணவாளன் வேண்டுமோ? நான் அழகாக இருக்கவில்லையோ? என் அழகைப் பார்க்கவேண்டுமானால் முக்கியமாக என் காதைப்பார்," என்று சொல்லிற்று.

"சீ, நீ அழகாகவே இருக்கவில்லை; உன் கால் கம்பிக்காலாயிற்றே. உன்னையும் மணப்பேனோ?" என்று சொல்லிவிட்டு அப்புறஞ் சென்றது.



சிறிதுதூரஞ் சென்றதும் குதிரையொன்று எதிரில் வந்தது. அது அந்தக் கொசுகைப் பார்த்து, "பெண்ணே, பெண்ணே, எங்கே இவ்வளவு அழகாகப் புறப்பட்டுப் போகி

றாய்? நீ போகிற இடத்தை நான் அறியப்படாதா?" என்று கேட்டது.

"இவ்வளவு ஆடம்பரத்துடன் எங்கே போகிறேன் என்பது தெரியவில்லையா? நான் எனக்கேற்ற முதல்தரமான புருஷனைக் கண்டுபிடிக்க அல்லவோ போகிறேன். யாருக்குங் கிடைத்தற்கு அருமையான புருஷனையல்லவோ தேடிக் கொண்டு வரப்போகிறேன்," என்று சொல்லிற்று.

அதைக்கேட்டு அந்தக் குதிரை, "என்னை மணப்பதற்கு வந்த தடையென்ன? என்னைவிட அழகுள்ள புருஷனோ உனக்கு அகப்படப்போகிறான்? என்னைக் கலியாணம் பண்ணிக்கொண்டாலும் நான் உன்னை என் முதுகின்மேல் சுமந்து கொண்டு போவேனே!" என்றது.

"எல்லாஞ் சரிதான். உன் காலோ குதிக்குங்கால். உன்னை நான் மணக்கமாட்டேன்," என்று மறுத்துவிட்டுப் போனது.

சிறிதுதூரஞ் சென்றதும், தும்பிக்கையினையும் இரண்டு தந்தங்களையும் துடைப்பம்போன்ற வாலினையுமுடைய யானை யொன்று எதிரில் வந்தது. அது அந்தக் கொசுகைப்பார்த்து, "என்ன இன்றையதினம் இவ்வளவு அழகாகக் காணப்படுகிறாய்? இந்தப் பக்ஷணங்களெல்லாம் யாருக்கு? இவைகளைத் தின்பதற்கு யார் கொடுத்துவைத்திருக்கிறார்கள்?" என்று கேட்டது.

"யானையாரே, நான் எனக்குத் தகுதியான அழகுள்ள புருஷனைத் தேடிவரப்போகிறேன். இவைகளை யெல்லாம் என் புருஷனுக்குக் கொடுக்கப்போகிறேன். நல்ல புருஷன் கிடைத்தால் அவனுக்குப் புஷ்பங்கூட வாங்கி முடிப்பேன்," என்று சொல்லிற்று.

"உனக்கேற்ற புருஷன் கிடைப்பதுதானோ அருமை? புருஷனைத் தேடுதற்காகவா இவ்வளவுதூரம் பிரயாணஞ் செய்யவேண்டும்? உள்ளூரில் கிடையாத புருஷனோ வெளியூரில் கிடைக்கப்போகிறான்? வெகு அழகு! வெகு அழகு!" என்று சொல்லிவிட்டுப் பின்னும் அதைப்பார்த்து, "என்னைவிடச்



சிலாக்கியமான புருஷனுங் கிடைப்பானோ? என்னைப்பார்த்த கண்கள் வேறொன்றையும் பார்க்க விரும்புமோ? விரும்ப மாட்டா. ஆனபடியினால் என்னையே நீ கலியாணஞ் செய்து கொள்ளலாமே." என்றது.

"நீ மிருகங்களில் உயர்ந்தவன்தான்; நீ அழகாகத்தா னிருக்கிறாய். ஆனாலும் உன் காலைப்பார்த்தால் உரல்போன் றிருக்கிறது. காலைப்பார்த்தால் காலையில் சாப்பிட்டதெல் லாம் வெளியில் வரும்போலிருக்கிறது." என்று பதில் சொல் லிவிட்டு அப்புறஞ் சென்றது.

சிறிதுதூரஞ் சென்றதும், நீண்ட வயிற்றினையும் உட்கு ழிந்த கண்ணினையும் கம்பிபோன்ற வாலினையும் உடைய குரங்கு ஒன்று எதிரில் வந்தது. எதிரில் வந்த குரங்கு, சுகி யத்துடனும் பணியாரத்துடனுஞ் செல்லும் கொசுகைப் பார்த்து, "என்ன சுந்தரி, எங்கேபோகிறாய்?" என்று கேட் டது.

"நான் ஒரு புருஷனைத் தேடிக்கொண்டு புறப்பட்டு வந் திருக்கிறேன். வழியில் ஒரு கொசுகு தன்னைக் கலியாணஞ்

செய்துகொள்ளும்படி வேண்டிற்று. 'உனக்குக் கால் கோணல்; உன்னை மணக்கமாட்டேன்,' என்று சொல்லிச் சிறிது தூரம் வந்தேன். கழுதையொன்று வந்து அப்படியே என்னைக் கேட்டது. கழுதைக்குக் கம்பிக்கால் என்று சொல்லி அதையும் மறுத்துவிட்டேன். பிறகு குதிரையொன்று சந்தித்துத் தன்னைக் கலியாணஞ் செய்துகொள்ளும்படி கேட்டது. 'குதிரையின் கால்குதிக்குங்காலாயிற்றே; நானெப்படி மணப்பது?' என்று சொல்லித் துரத்திவிட்டேன். பிறகு யானை தன்னைக் கலியாணஞ் செய்துகொள்ளும்படி வேண்டிற்று. 'உன் கால் உரற்கால்; உன்னை மணக்கமாட்டேன்,' என்று அதற்குஞ் சொல்லி யனுப்பிவிட்டேன். இனி எனக்கேற்றவனைத்தான் தேடவேண்டும்," என்றது.

"நீ சொன்னபடி அவர்களெல்லாம் விகாரமானவர்கள் தான். என்னிடத்தில் ஏதேனுந் தோஷம் உண்டோ? தோஷம் இல்லாவிட்டால் என்னைக் கலியாணஞ் செய்துகொள்ளுகிறது தானே?" என்று சொல்லிற்று.

"நீ பார்வைக்கு அழகாக இருக்கிறாய். உன்னையே மணக்கிறேன்," என்று சொல்லி இரைந்துகொண்டே அக்குரங்கின் மூக்கினுள் நுழைந்தது.

மூக்கினுள் கொசுகு நுழையவும் குரங்கிற்கு அருவருப்புண்டாகி, தன் கையால் பலமுறை தன் மூக்கைத் தேய்த்தது. இப்படிப் பல்முறை தேய்த்ததனால் அக்கொசுகு நசுங்கி இறந்தது. குரங்கு சந்தோஷத்துடன் பணியாரத்தையும் சுகியத்தையும் தின்றது.



## 11. சிங்கமும் முயலும்.

நெடுநாளைக்கு முன்னே ஒரு பெரிய காட்டில் சிங்கமொன்றிருந்தது. அந்தச் சிங்கம், தான் மிருகங்களுக்கெல்லாம் இராஜன் என்பதைக் காட்ட, அந்தக் காட்டில் இருந்த மிருகங்களையெல்லாம் கொன்று தின்றுகொண்டே வந்தது. அப்படிச் செய்துகொண்டு வந்ததனால் அந்தக் காட்டில் இருந்த மிருகங்களிற் பல ஒழிந்துபோயின. மிகுதியாக



இருந்த மிருகங்களெல்லாம் தாம் சாகவேண்டிய காலம் இன்று வருமோ அல்லது நாளைவருமோ என்று ஏக்கங்கொண்டேயிருந்தன.

அப்படி இருக்கும் நாட்களில் ஒருநாள், எல்லாமிருகங்களும் கூட்டமாகக் கூடிச் சிங்கம் திடீர் திடீர் எனத் தன் குகையைவிட்டு வெளியேவந்து தம் இனத்தவரை அழிப்பதைப்பற்றிப் பேச ஆரம்பித்தன. அப்பொழுது அந்தக் கூட்டத்துள் நரியொன்று எழுந்து, "ஐயா நண்பர்களே, சகோதரர்களே, நம்முடைய அரசன் இப்படித் திடீர் திடீரென வந்து தன் கண்ணெதிரிற்படும் நம் சகோதரர்களையெல்லாம் நாசம் செய்வதைப் பார்த்தால் இங்கு இப்பொழுது இருப்பவர்க

ளில் நாளையதினம் இருப்பவர் இத்தனைபேர், இறப்பவர் இத்தனைபேர் என்று சொல்லக் கூடாமையாக இருக்கிறது. கொள்ளை நோய்போலக் கணக்கில்லாமல் கொன்றுவிடுவது சரியாகவும் காணப்படவில்லை. அரசன் அப்படிக் கொல்வதற்கு நாம் இடம் கொடுத்துவருவதும் சரியல்ல. நாம் ஏதாவது ஒரு ஏற்பாடு நம் அரசனுடு செய்துகொள்ளவேண்டும். அப்படிச் செய்துகொண்டால்தான் நாமெல்லாம் இன்னுஞ் சில காலமாவது ஜீவிக்க முடியும். ஏற்பாடொன்றும் செய்துகொள்ளாவிட்டால் சீக்கிரத்தில் எல்லோரும் மடியவேண்டி வரும். எல்லோரும் மடிந்தொழிந்தால் இந்தக் காடு கடைசியில் மிருக சஞ்சாரம் அற்ற காடாகிவிடும்," என்று சொல்லிற்று.

அவ்வார்த்தையைக்கேட்ட மற்ற மிருகங்கள், "நண்பனே, நீ சொல்வது மிகவுஞ் சரியான காரியமே. எங்களுக்கெல்லாம் தோன்றாதவிஷயம் உன் புத்திக்குத் தோற்றியிருக்கிறபடியினால், நீயே அந்தச் சிங்கத்தினிடம் செய்துகொள்ளவேண்டிய ஏற்பாடு இன்னதென்பதை எடுத்துச் சொல்லவேண்டும்," என்று வேண்டிக்கொண்டன.

அதைக்கேட்டு அந்த நரி, "நாளொன்றுக்கு இருபதுபேர் முப்பதுபேரை இழப்பதைவிட நாளொன்றுக்கு ஒருவரை இழப்பது உங்கள் எல்லோருக்கும் சம்மதமான காரியமாக இருக்குமென்று நம்புகிறேன். பிரதிதினம் ஒருவரைக் கொடுப்பது உங்களுக்குச் சம்மதமேயானுல் நானே அந்த அரசனிடம் சென்று தண்டனிட்டு, 'ஐயா, நீங்கள் இந்தக் காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம் பிரதிதினமும் கணக்கில்லாமல் அழித்துவிடுகிறீர்கள். இப்படி அழித்துவிட்டால் சிலகாலத்திற்குள் உங்களுக்கு ஆகாரமே இல்லாமற் போய்விடும். அப்பொழுது என்ன செய்யப்போகிறீர்கள்? உங்களுக்கு ஆகாரம் எப்பொழுதும் குறைவில்லாதிருப்பதற்காக நாங்களெல்லாம் ஒரு ஏற்பாடு செய்துகொண்டு வந்திருக்கிறோம். அந்த ஏற்பாட்டிற்கு நீங்கள் உடன்பட்டால் உங்களுக்கு எப்பொழுதும் ஆகாரம் குறைவில்லாமல் இருக்கும்,' என்று சொல்வேன். அப்பொழுது அந்தச் சிங்கம் 'நீங்கள் ஏற்படுத்திக்கொண்டுவந்த ஏற்பாடு என்ன?' என்று கேட்கும். அப்படிக் கேட்கும்போது, 'அரசே, எங்களுக்குள் முறைபோட்டுக்கொண்டு நாள்தோ

றும் உங்கள் பசிவேளைக்கு ஒவ்வொருவராக வருகிறோம். முறைப்படி வருகிறவரை நீங்கள் கொன்று தின்று உங்கள் பசியைத் தீர்த்துக்கொள்ளலாம். உங்கள் பசிவேளைக்கு யாரே னும் வரத்தவறினால் எங்கள் எல்லோரையும் ஒரேதினத்தில் கொன்றொழியுங்கள்,' என்று சொல்லி வேண்டிக்கொள்ளு கிறேன்" என்று சொல்லிற்று.

அது சொன்ன ஏற்பாட்டிற்கு மற்ற மிருகங்களெல்லாம் ஒப்புக்கொண்டு அந்த நரியுடன் மிருகராஜனிடம் சென்று, தூரநின்று தண்டனிட்டு, தாம் செய்துகொண்டு வந்திருக்கும் ஏற்பாட்டைச் சொல்லின.

அவ்வேற்பாட்டை அந்தச் சிங்கம் காதாரக்கேட்டுச் சந் தோஷப்பட்டு, "சரி, அப்படியே செய்யுங்கள். அப்படிச் செய்யத் தவறினால் உங்கள் கூட்டம் முழுவதையும் ஒரேநா ளில் நாசஞ் செய்துவிடுவேன் என்பதை மனத்தில் வையுங் கள்," என்று சொல்லி அனுப்பினது.

உடனே அந்தக் காட்டில் இருந்த மிருகங்களெல்லாம் முறைபோட்டுக்கொண்டன. அந்த முறைப்படி அடுத்த தினத் திலிருந்து ஒவ்வொரு மிருகமாக, அந்தச் சிங்கத்தினுடைய குகைக்குக், காட்டிலிருந்த மிருகங்கள் அனுப்பிக்கொண்டு வந்தன.

அப்படி அனுப்பிவரும் நாட்களில் ஒருநாள் ஒரு கிழ முயலின் முறை வந்தது. அன்றையதினம் மற்ற மிருகங்களெல் லாம் சேர்ந்து இந்தக் கிழமுயலைச் சிங்கத்தினிடம் போகும் படி அனுப்பின. அவைகளால் அனுப்பப்பட்ட கிழமுய லானது, அந்த மிருகங்களின் எதிரில் விரைவாகச் செல்வது போல நடித்துக்காட்டிப், பிறகு ஓரிடத்தில் சிங்கத்தின் பசி வேளை கழியும்வரையில் தங்கியிருந்தது. அதற்குப்பிறகு எழுந்து மெதுவாகத் தள்ளாடிய நடையுடன் போய்ச் சிங்கத் தின் எதிரில் பயந்து நிற்பதுபோல நின்றது.

அதைக்கண்ட சிங்கம் மிகவும் கோபங்கொண்டு, "ஓ கிழ முயலே, யானை புலி முதலிய பெரிய கொடிய மிருகங்களெல் லாம் எவ்வளவோ பயந்து என் பசிவேளைக்குச் சரியாக

வந்துகொண்டிருக்கும்போது, கிழமுயலாகிய நீ என்னை இவ்வளவு அலக்ஷியம்செய்து, என் பசிவேளை தவறி வரலாமோ? நீ இப்படிச் செய்தபடியினாலே உங்கள் கூட்டத்தவரையெல்லாம் இன்றையதினம் நாசமே செய்துவிடுகிறேன்." என்றது.

அவ்வார்த்தைகளைக் கேட்ட முயல், "ஓ மகாராஜாவே, நீங்கள் ஏழையாகிய என்மீது இவ்வளவு கோபம்கொண்டால் நான் என்னசெய்வது? மகாராஜாவினுடைய பசிவேளைக்கு நான் வரத் தவறியது என்னுடைய குற்றமாயிருந்தால் தேவரீர் அப்படியே செய்யலாம்." என்று சொல்லும்போது அந்தச் சிங்கம், "பசிவேளைக்கு வராதது உன்னுடைய தவறு அல்லவோ? உன்னுடைய தவறல்லாதிருப்பின் பிறகு யாருடைய தவறுதான் அது?" என்று கேட்டது.

"மகாராஜா பசியோடிருப்பாரே என்று பயந்து, அதிகாலையில் எழுந்து, புறப்பட்டு வரும்போது வழியில் ஒரு பெரிய சிங்கம் ஒன்று எதிரேவந்து, என்னை மடக்கி, 'எங்கேபோகிறாய்?' என்று கேட்டது. 'எங்கள் மகாராஜாவின் பசியைத் தணிப்பதற்காகப் போகிறேன்' என்று சொன்னேன். அப்படிச் சொல்லவும், 'உங்களுடைய மகாராஜா யார்? நான் அல்லவோ உங்களுடைய மகாராஜன்? என்னைவிட வேறு ராஜனும் இந்த இடத்தில் இருக்கிறானோ? இன்னொருவனையும் நீங்கள் மகாராஜன் என்று அழைக்கிறீர்களோ?' என்று கோபித்து என்மீது பாயவந்தது. அப்பொழுது, 'ஐயா, என்னைக் கொல்லாதேயுங்கள். எங்கள் ராஜனுடைய பசிக்கு உதவும்படி என்னை அனுப்பாமல் இவ்விடத்தில் கொன்றுவிடுவீர்களானால் அவருக்குக் கோபம் அதிகரித்து எங்கள் ஜாதியாரையெல்லாம் கொன்றுவிடுவார்' என்று சொல்லி நாம் செய்துகொண்ட ஏற்பாட்டையுஞ் சொன்னேன். எவ்வளவு சொல்லியும் அவர் என்னை விடுவதாகக் காணப்படவில்லை. அதற்குப்பிறகு சங்கதியைத் தெரிவித்துவிட்டு மறுபடியும் அவரிடம் வருவதாகக் கூறினேன். அப்படிக் கூறவும், அவர் ஒப்புக்கொண்டு, என்னைச் சங்கதி அறிவித்துவர அனுப்பினார். தங்களிடம் சங்கதியை அறிவித்துவிட்டேன். மறுபடியும் அவரிடம் போக உத்தரவு அளியுங்கள். அவர் இருக்கும்

விதத்தைப் பார்த்தால் நாளையமுதல் தங்கட்கு ஒருவித உணவும் கிடைக்க விடமாட்டார்போலிருக்கிறது," என்று சொல்லிற்று.

இவ்வார்த்தைகளைக்கேட்ட சிங்கம், "அவன் யார்? அவன் எங்கிருக்கிறான்? அவன் உருவத்தில் எப்படி இருக்கிறான்?" என்று கேட்டது

அப்பொழுது முயல், "மகாராஜாவே, அவர் உருவில் தங்களைப்போலவே காணப்படுகிறார். அவர் இருக்கும் இடத்தைக் காட்டுகிறேன் வாருங்கள்," என்று சொல்லி அந்தச் சிங்கத்தை அழைத்துக்கொண்டுபோய்ப் பாழடைந்து கிடக்கும் பெரிய கிணறு ஒன்றைக் காட்டி, "இதனுள் இருக்கிறது" என்று சொல்லிற்று. சொல்லவும் அச்சிங்கம் அக்கிணற்றை எட்டிப் பார்த்தது. அக்கிணற்றுள் தெரியும் தன் நிழலைக்கண்டு உண்மையாகவே ஒரு சிங்கம் அடியில் இருக்கிறது என்று நினைத்து, அதைப்பார்த்து விறைத்தது. சிங்கம் விறைத்த பாவனையை அந்த நிழலும் காட்டிற்று. அதைக்கண்டு அடியிலுள்ள சிங்கமும் தன்னை நோக்கி விறைக்கிறது என்று கோபித்து அதன்மீது பாய்ந்தது. தான் பாயும் இடம் இன்னது என்பதை யோசியாமல் பாய்ந்தபடியினால் அந்தச் சிங்கம் கிணற்றுள் மூழ்கி இறந்தது.

அதைக்கண்ட கிழமுயல் மிகுந்த சந்தோஷத்துடன் தன் இருப்பிடஞ்சென்று, அக்காட்டிலிருந்த மிருகங்களையெல்லாம் தருவித்துத் தான் செய்த தந்திரத்தைச் சொல்லி அவைகளுக்குச் சந்தோஷத்தை ஊட்டினது. அவைகள் அதைக்கேட்டு அந்தக் கிழமுயலை மிகவும் புகழ்ந்து கொண்டாடின.



## 12. சூரியன்குஞ்சு

ஒரு பட்டணத்துப் பிராமணன் ஒரு கிராமத்தில் இருந்த பிராமணனுக்குத் தன் மகளைக் கலியாணம் செய்துகொடுத்தான். கலியாணத்துக்குப்பிறகு அவனைத் தன் வீட்டுக்குத் தருவித்து விருந்திடவேண்டும் என்று நினைத்து, ஒருநாள் தன் கூரைவீட்டை நன்றாக அலங்கரித்து வைத்துவிட்டு, அவ



னுக்கு ஆள் அனுப்பினன். அவன் சந்தோஷமாகத் தன் மாமியார்வீட்டிற்கு வந்தான். மாப்பிள்ளை வந்தவேளையில் அவன் மைத்துனர் இருவர் மெழுகுவர்த்தி விளக்கு ஏற்றி வைத்து அதன் வெளிச்சத்தில் படித்துக்கொண்டிருந்தனர்.

வந்த மாப்பிள்ளை தன் மைத்துனர் அருகிற் சென்று, "மைத்துனரே, மைத்துனரே, உங்கள் எதிரில் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அதன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

அவனைப் பரிகசிக்க வேண்டுமென்று நினைத்து அவர்கள், "மைத்துனரே, மைத்துனரே, அது சூரியன்குஞ்சு. அது சூரியன்குஞ்சு என்பதை நீங்கள் அறியமாட்டீர்களோ? அந்

தச் சூரியன்குஞ்சினுடைய வெளிச்சத்தில்தான் நாங்கள் படிக்கிறோம்," என்று சொன்னார்கள்.

அதைக்கேட்ட மாப்பிள்ளை, "இது ஒரு விநோதமான பொருளாக இருக்கிறது. இது நம்மூரில் இல்லை. இதை எப்படியும் நம்மூருக்குக் கொண்டுபோகவேண்டும். இதை எப்படிப் பெறுகிறது? மாமியாரைக் கேட்பது மரியாதைக் குறைவான காரியமாகத் தோன்றுகிறது. ஆனபடியினால் ஒருவரும் அறியாதபடி மெதுவாக எடுத்துக்கொண்டு போய் விடுவோம்," என்று முதலில் எண்ணிப் பிறகு தீர்மானித்து, அதன்பின் தீர்மானித்தபடியே சமயம்பார்த்து, அந்த மெழுகு வர்த்தி விளக்கை யெடுத்துத் தாழ்வாரத்து இறப்பில் ஒளித்து வைத்தான்.

சிறிதுநேரஞ் சென்றதும் வீடு தீப்பற்றிக்கொண்டது. வீடு தீப்பற்றியதைப் பார்த்து வீட்டில் இருந்தவர்களெல்லாம் வெளியே ஓடி அதை அணைக்க முயன்றார்கள். எவ்வளவு முயற்சிசெய்தும் தீயை அணைக்க முடியவில்லை. வீடு நன்றாகப் பற்றி எரிந்துவிட்டது. வீடு எரிந்து சாம்பலானபிறகு, அவ்வீட்டுப் பிராமணனும் அவன் பிள்ளைகளும் ஏதேனும் சாமான் வெந்து சாம்பலாகாது தப்பியதுண்டோ என்று தேடிப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

அச்சமயத்தில் நாட்டிலிருந்துவந்த மாப்பிள்ளையும் ஏதோ இழந்தவன்போலத் தானும் தேடிக்கொண்டிருந்தான். அப்படித் தேடுபவனைப்பார்த்து, அவன் மைத்துனர், "நீங்கள் என்ன தேடுகிறீர்கள்? ஏதேனும் பணம்வைத்து இழந்தீர்களோ?" என்று கேட்டனர்.

85791

"சூரியன்குஞ்சை ஊருக்கு எடுத்துப்போக நினைத்து அந்தத் தாழ்வாரத்து இறப்பில் வைத்தேன். அதை இப்பொழுது தேடுகிறேன்," என்று சொன்னான் அவர்கள் வீட்டுக்குவந்த நாட்டுமாப்பிள்ளை.

அவ்வார்த்தையைக் கேட்ட மைத்துனர் அறிவில்லாதவனுடன் விளையாடியதனால் பெருங்கேடு விளைந்தது என்றறிந்து, தம் அறிவீனத்துக்காகப் பெரிதும் துக்கப்பட்டனர்.





## 13. பிராமணனும் வேங்கையும்.

எளிய பிராமணன் ஒருவன் அயலூருக்குச் செல்வதற்காகக் காட்டுவழியாகப் போய்க்கொண்டிருந்தான். அவன் போகும் வழியில் பெரிய புலியொன்று ஒரு கூட்டில் அடைக்கப்பட்டிருந்தது. அது அந்தப் பிராமணனைப் பார்த்து, "பிராமணரே, பிராமணரே, ஒரு பிராணி ஒரு கூட்டில் அடைபட்டுத் தவிப்பதைப் பார்த்தும் அதை விடுவிக்காமல் செல்வது தருமமா? தருமசாஸ்திரம் படித்த பிராமணராயிருந்தும் நீர் இரங்காமல் இருப்பது தருமமா?" என்று கேட்டது.

அதற்கு அப்பிராமணன், "நீயோ கொடியமிருகம்; துஷ்ட பிராணி. உனக்கு உபகாரம் செய்வாரும் உண்டோ? உபகாரம் செய்தால் நீ உடனே அபகாரமல்லவோ செய்வாய்!" என்று சொன்னான்.

"நீ என்னை அப்படி நினையாதே. ஒரு சிறு உதவி செய்தவர்களையுங்கூட யான் மறப்பதில்லை. என்னைப்பற்றிய அனுபவம் உனக்கு இல்லாமையினால் நீ அப்படிச் சந்தேகிக்கிறாய்

அனுபவம் இருந்தால் சந்தேகிக்கமாட்டாய். இப்பொழுது ஒருமுறை எனக்கு நன்மைசெய்து பார்," என்று சொல்லிற்று.

அது சொன்ன சொல்லில் நம்பிக்கைவைத்து அந்த ஏழைப்பிராமணன், புலி அடைபட்டிருந்த கூட்டின் கதவைத் திறந்துவிட்டனன்.

கதவு திறக்கப்பட்டதும் புலி உடனே வெளியே வந்தது. வந்ததும் அந்த ஏழைப்பிராமணனுடைய ஊட்டியைப்பிடித்து அவனைக் கொல்ல முயன்றது. அதைக்கண்ட பிராமணன், "ஓ துஷ்டமிருகமே, யான் சொன்னபடியே நன்மை செய்தவனுக்குத் தீமை செய்ய ஆரம்பித்துவிட்டாயே! உன் துஷ்டத் தனத்தைக் காட்டிவிட்டாயே! இப்படிச் செய்வது சரியோ? நான் உனக்குத் தீங்குசெய்திருந்திருப்பேனேயாகில் எனக்குத் தீங்கு செய்யலாம். உனக்கு நன்மையைச் செய்திருக்கையில் என்னைக் கொல்லவருவது சரியல்லவே," என்று சொன்னான்.

"உன் நீதிசாஸ்திரமெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். அவற்றையெல்லாம் ஒருபக்கம் மூட்டையாகக் கட்டிவையும். எனக்கு இப்பொழுது பசி எடுக்கிறது. அப்பசி என்னை வருத்துகிறது. அந்தப் பசியைத் தீர்த்துக்கொள்ளக் கடவுளும் ஆகாரத்தைக் கொடுத்திருக்கிறார். அவர் கொடுத்த ஆகாரத்தை விருப்புடன் உண்ணாமல் தள்ளிவிட்டு வேறொரு உணவுக்காகக் காட்டில் அலைபவோ? மேலும் மனுஷரே நாயிலும் கடையானவர்கள். அவர்களைப் பார்த்துச் சும்மாவிடுவது கொஞ்சமும் சரியல்ல," என்று சொல்லிற்று.

இப்படி அந்தப் புலி சொல்லிக்கொண்டிருக்கையில் பசுவொன்று சற்றுத்தூரத்தில் செல்வதைப் பிராமணன் பார்த்தான். பார்த்ததும், புலியை நோக்கி, "என்னைக் கொல்வது சரியோ என்று அந்தப் பசுவைக் கேள்," என்று சொன்னான்.

அப்படியே அப்புலி, அந்தப் பசுவைப் பார்த்து, "இந்தப் பிராமணனைக் கொல்லலாமோ அல்லது கொல்லாமல் விடலாமோ?" என்று கேட்டது.

அதற்கு அப்பசு, "மனுஷஜன்மம் எடுத்தவர்களைக் கொன்றே தீரவேண்டும். அவர்களிடத்தில் நன்றியறிதல் என்பதே இல்லை. நாங்கள் கன்றை ஈன்று பால்தரும்போது எங்கள் பாலையெல்லாம் அவர்கள் குடிக்கிறார்கள். பால் மாறின

வுடனே, எங்கள் பாலைக் குடித்ததை மறந்துவிட்டு, மாடு அடிக்கும் பறையனுக்கு எங்களை விற்றுவிடுகிறார்கள். இவர்கள் செய்வதுபோல எவர்கள் செய்வார்கள்? இப்படிப்பட்டவர்களைக் கொல்லாமலும் விடலாமோ?" என்றது.

அப்பொழுது அந்தப் புலி, "பிராமணரே, என்னசொல்லுகிறீர்?" என்று கேட்டது.

அதற்கு அந்த ஏழைப்பிராமணன், "யாரோ ஒருவன் செய்த கெடுதியை நினைத்து அப்பசு எல்லோரையும் வெறுக்கிறது. அது அப்படிச் சொல்வது சரியல்ல. அதன்பேச்சு வேண்டாம். இப்பொழுது அங்கு வெட்டப்படும் மாமரத்தைக் கேட்டுப்பார். அம்மரம் சொல்லுகிறபடி செய்," என்று சொன்னான்.

புலி அம்மரத்தைப் பார்த்து, "ஓ மாமரமே, சுவையுள்ள கனிதரும் மாமரமே, இப்பிராமணன் என்னைக் கூட்டிலிருந்து விடுவித்தான். அவனால் விடுவிக்கப்பட்ட எனக்குப் பசி அதிகமாக இருக்கிறது. அப்பசிக்கு அவனைப் புசிக்கச் சென்றால், தன்னைப் புசிப்பது சரியல்ல என்று அவன் சொல்லுகிறான். அவன் அப்படிச் சொல்வது சரியோ? அவனைப் புசியாமல் என் பசியை எப்படித் தீர்த்துக்கொள்ளுகிறது? நீ சற்றுத் தெரியும்படி சொல் பார்ப்போம்," என்று கேட்டது.

அப்பொழுது அந்த மாமரம், "ஏன் இதுவரையில் கொல்லாமல் வைத்திருந்தாய்? உடனே கொன்றுவிடு. மனுஷசரீரம் படைத்தவர்களுக்கு நன்றி என்பதே கிடையாது. நன்றியறியாதவர்களைக் கொன்றேதீரவேண்டும். இவர்கள் என்னுடைய இலையையும், காயையும், பழத்தையும், கொட்டையையும் அனுபவிக்கின்றனர். அப்படி அனுபவிக்குமவர்கள் காய் மாறியகாலத்தில் என் கிளைகளையே வெட்டி என்னைப் பலஹீனப்படுத்துகின்றனர். அவர்கள் இப்படிச் செய்வதனால் அவர்கள்மீது எனக்குக் கொஞ்சமும் இரக்கமே கிடையாது," என்று சொல்லித் தீர்த்தது.

பிராமணனால் நடப்பட்ட பசுவும் மாமரமும் இப்படித் தனக்கு விரோதமாகச் சொல்லவும் அவன் என்னசெய்வது என்று விழித்துக்கொண்டிருந்தான். அச்சமயத்தில் அவ்வழி

யாக நரியொன்று சென்றது. அதைக் காட்டி, "நீர் இதைக் கேளும். இதுவும் எனக்கு விரோதமாகச் சொல்லுமேயானல் என்னைக் கொன்று பக்ஷியும். தண்ணீர் மூன்றுபிழை பொறுப்பதுபோல நீர் மூவரைக் கேட்டுப்பார்த்தீர் என்று தேறி உமக்கு இரையாவேன்," என்று சொன்னன்.

அதற்கு உடன்பட்டு அப்புலி, நரியைப்பார்த்து, "நரியாரே, நரியாரே; இப்பிராமணனை யான் கொல்வது சரிதானே? அவன் என்னைக் கூட்டிலிருந்து விடுவித்தான். இப்பொழுது என்னைப் பசி வருத்துகிறது. பசியின்நிமித்தம் என்னை ரக்ஷித்தவனைப் பக்ஷிக்கப் பார்க்கிறேன். இவன் தன்னைப் பக்ஷிக்க வேண்டாம் என்று சொல்லுகிருன். நீர் என்னசொல்லுகிறீர்?" என்று கேட்டது.

"ஓ புலியாரே, நீர் சொல்வது எனக்குக் கொஞ்சமும் விளங்கவில்லை. அவனைப் பிடித்துக்கொண்டிருக்கும் பிடியை விட்டுவிட்டுச் செவ்வையாகச் சொல்லும்," என்றது அந்நரி.

அப்படியே அப்புலி பிராமணன் கழுத்தை விட்டுவிட்டுத் தன் கதையைச் சொல்லிற்று. அப்படிச் சொல்லியுங்கூட அந்த நரி, "புலியாரே, புலியாரே, நீர் சொல்வது தெரியவில்லை. நீர் எந்தக்கூட்டில் எப்படி இருந்தீர்? இருந்தவிதத்தினைச் செவ்வையாகக் காட்டுவீரானல் தராசின் கோல்போல விஷயத்தைச் செவ்வையாகச் சீர்தூக்கிப் பார்த்துச் சொல்வேன். முதலில் நீர் இருந்த கூட்டைக் காட்டும்," என்றது.

அந்த நரியின் விருப்பப்படியே அந்தப் புலி நரியை, அழைத்துக்கொண்டுபோய், தான் அடைபட்டிருந்த கூட்டைக் காட்டிற்று. கூட்டைப் பார்த்ததும், "இந்தச் சிறிய கூட்டிற்குள் நீர் எப்படி இருந்தீர்? இருந்த விதத்தினைக் காட்டும்," என்று கேட்டது.

உடனே கூட்டிற்குள் புலி நுழைந்து சென்று, "இப்படித்தான் இருந்தேன்," என்று சொல்லிற்று.

அதற்குப்பிறகு பிராமணனைப் பார்த்து, "இக்கூட்டின் கதவு எப்படி மூடப்பட்டிருந்தது? மூடப்பட்டிருந்த விதத்தினைக் காட்டும்," என்று கேட்டது.

அந்தப் பிராமணன் பழையபடி கதவை மூடித் தாழிட்டான்.

அவன் தாழிட்டானதும், அப்பிராமணனைப் பார்த்து, “ஓ பிச்சுபிடித்த பிராமணனே, துஷ்டனுக்கு நன்மை செய்ய லாமோ? நன்மை செய்தால் தீமையல்லவோ விளையும்? நன்மை செய்த உம்மைக் கொல்ல அல்லவோ இப்புலி வந்தது? இனி யாகிலும் எச்சரிக்கையுடன் இரும். மறுபடியும் கதவைத் திறவாதேயும். சீக்கிரம் வீடுபோய்ச் சேரும்,” என்று சொல்லி அவனை அனுப்பியது.





## 14. கொக்கும் நண்டும்.

ஒருநாள் ஒரு ஏரிகரையில் ஒரு கிழக்கொக்கானது, தவஞ்செய்வதுபோல, ஒற்றைக்காலால் நின்று கண்ணை மூடிக் கொண்டிருந்தது. அந்த ஏரியில் தண்ணீர் குடிக்கவந்த

ஆடொன்று, கண்ணை மூடிக்கொண்டு ஒற்றைக்காலினால் நிற்கும் கொக்கைப் பார்த்து, "கொக்காரே, கொக்காரே, ஒற்றைக் காலினால் நின்றுகொண்டு என்னசெய்கிறீர்? ஏன் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறீர்? உன்னருகில் வரும் மீன்களையெல்லாம் ஏன் புசிக்காமல் இருக்கிறீர்? உமக்குச் சம்பவித்தது என்ன?" என்று கேட்டது.

அப்பொழுது அந்தக் கொக்கானது, "ஐயா சாந்தமூர்த்தி, இந்த ஏரியானது வெய்யிலின் கடுமையால் நாளுக்குநாள் வறண்டுபோகிறது. ஏரிநீர் வறள்வதை அறிந்த வலைகாரர் நாளையதினம் இங்குவந்து மீன் பிடிப்பதாகப் பேசிக்கொண்டு போயினர். ஏரி வறளப்போகிறதே என்னும் விசனம் ஒரு பக்கமும் எனக்கு இதுவரையில் தன் கூட்டத்தை உணவாகக் கொடுத்துவந்த மீன்களெல்லாம் வலைஞனால் பிடிபடப் போகிறதே என்னும் விசனம் மற்றொரு பக்கமுமாக வருத்துகின்றன. இவ் விசனத்தினால்தான் இரையொன்றும் எடாமல், இந்த ஏரியிலுள்ள மீன்களுக்கு எந்தவிதத்தில் உதவி செய்யலாம் என்பதைப்பற்றி யோசித்துக்கொண்டிருக்கிறேன்," என்று சொல்லிற்று.

அதைக்கேட்டு ஆடு ஒன்றும் பதில் சொல்லாமல் தண்ணீரைக் குடித்துவிட்டு வந்தவழியே போய்விட்டது.

இந்த இருவருடைய சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த மீன்களிற் சில, தம் இனத்தவரிடஞ் சென்று கொக்கு சொன்ன சங்கதியை எடுத்துச் சொல்லின. அச்சங்கதியைக் கேட்ட மீன்களெல்லாம், "இதற்கு என்னசெய்வது?" என்று ஆலோசிக்கத் தொடங்கின. அப்பொழுது ஒன்று எழுந்து, "நம்மவர்களில் சிறுவராயிருப்பவர் மெதுவாக அந்தக் கொக்கின் அருகிற் சென்று அதன் நிலைமையையறிந்து வரவேண்டும். அது உண்மையாகவே நம்மிடத்தில் இரக்கமுள்ளதாய் இருக்குமேல் அருகிற் செல்பவரைப் புசியாமல் விட்டுவிடும். பொய் வேஷத்துடன் இருப்பதானால் அருகிற் செல்பவரைப் புசிக்கும். அருகிற் செல்பவரைப் புசியாமல் விட்டுவிடுமாகில், அது நல்ல பறவை என்று நம்பி அதன் சொற்படி கேட்கலாம்," என்று சொல்லிற்று.

அந்த மீன் சொன்ன வார்த்தை மிகவும் சரியானதே என்று மற்ற மீன்களெல்லாம் கருதி, அவ் வேற்பாட்டுக்கு உடன்பட்டு, சில சிறு மீன்களைக் கொக்கிருக்கும் இடத்திற்கு அனுப்பின. சிறு மீன்களும் அப்படியே கொக்கின் அருகில் போவதும் வருவதுமாக விருந்தன. அந்த மீன்களையெல்லாம் அக்கொக்கு ஒன்றுஞ் செய்யவில்லை.

கொக்கு தம்மைப் புசியாமல்விட்ட சங்கதியைச் சிறு மீன்களெல்லாம் பெருமீன்களிடஞ் சென்று அறிவித்தன. அவ்வார்த்தைகளைக்கேட்ட பெருமீன்களெல்லாம், கொக்கு மிகவும் சாந்தமான பிராணி என்று எண்ணி, அதனருகில் வந்து, "ஓடு மீன் ஓட, நீர் வாடியிருக்கும் காரணம் யாது?" என்று கேட்டன.

அதற்கு அந்தக் கொக்கு, "ஓ மீன்களே, உங்கள் இனத்தவரெல்லாம் எனக்கு இரைதந்தனர். அப்படி இரை தந்தவர்களுடைய வமிசத்தாருக்குக் கெடுதி நேரிட்டிருக்கிறதே என்னும் விசனம் என்னை வாட்டுகிறது. இந்த ஏரி நாளுக்கு நாள் வறண்டுகொண்டே போகிறது. ஏரி வறள்வதைக்கண்ட வலைஞர் இதில் வந்து நாளைய தினம் மீன் பிடிக்கப்போகிறதாகச் சொல்லிப் போயிருக்கிறார்கள். உங்களுக்கெல்லாம் ஒரேநாளையில் அழிவு வந்துவிட்டதே என்னும் விசனம் அதிகமாக இருக்கிறது," என்று சொல்லிற்று.

அதைக்கேட்ட மீன்களெல்லாம், "ஓ வெண்கொக்காரே, நாங்களெல்லாம் பிழைப்பதற்கு வழியில்லையோ? ஏதேனும் வழியிருந்தால் காட்டலாகாதா? இந்தச் சமயத்தில் எங்களுக்கு உதவி செய்பவர்கள் உங்களையன்றி வேறு ஒருவருமில்லை. நீங்கள் எப்படியாவது உதவி செய்யவேண்டும்," என்று சொல்லி வேண்டின.

அப்பொழுது அந்தக் கொக்கு, "நீங்கள் இவ்வளவு என்னை வேண்டிக்கொள்வதனால் நான் ஒன்று சொல்லுகிறேன். அதன்படி நீங்கள் நடந்தால் பிழைக்கலாம்," என்று சொல்லிப் பின்னும் சொல்லுகிறது. "மீன்களே, இந்த ஏரியை விட்டு மேற்கே சிறிதுதூரஞ் சென்றால் மடு ஒன்று தெரிகிறது. அந்த மடுவில் எப்பொழுதும் நீர் வற்றுகிறதில்லை. அந்தப்

பக்கம் வலைஞர் வருவதுமில்லை. அந்த இடத்திற்கு நீங்களெல்லாம் செல்வீர்களானல் சுகமாகப் பிழைத்திருக்கலாம்." என்றது.

அதைக்கேட்ட மீன்கள், "நாங்கள் கரையேறினதும் எங்கள் பிராணன் போய்விடுமே! நாங்கள் எப்படி அரைமைல் தூரம் ஒருமைல் தூரம் நடந்துசெல்வது? அந்த இடத்தை எமக்குச் சொன்ன நீரே எம்மை அவ்விடத்தில் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டும்," என்று பிரார்த்தித்தன.

அவ்வார்த்தைகளைக் கேட்டுக் கொக்கானது சந்தோஷப்பட்டு, தனக்குண்டான சந்தோஷத்தை வெளியே காட்டாமல் உள்ளடக்கிக்கொண்டு, "அப்படியே ஆகட்டும்," என்று சொல்லிற்று. பிறகு, ஒவ்வொன்ருக எடுத்துக்கொண்டுபோய்த் தனக்கு வேண்டியவளவு நன்ருகத் தின்றுவிட்டு, அதிகமாகக் காணப்பட்ட மீன்களையெல்லாம், அந்த ஏரிக்கு மேற்கேயுள்ள ஒரு குளத்தின் கற்படியில் உலரவைத்தது.

இப்படி ஏரியிலுள்ள எல்லா மீன்களையும் எடுத்துக் கொண்டுபோய்க் குளப்படியில் சேர்த்துவிட்டுக் கடைசியில் நண்டு ஒன்றினைத் தூக்கிக்கொண்டு ஆகாயமார்க்கமாகப் பறந்து சென்றது. அப்படிப் பறந்து செல்லுகையில், அந்த நண்டு குளப்படியில் உலரவைத்திருக்கும் மீன்களைப் பார்த்தது. அவைகளைப் பார்த்ததும், கொக்கு வஞ்சகமாக மீன்களையெல்லாம் எடுத்துக்கொண்டுபோய்க் கொன்று தின்றிருக்கிறது என்றறிந்துகொண்டு, குளத்தருகில் செல்லும்வரையில் சும்மாவிருந்து, பிறகு, கொக்கின் கழுத்தைத் தன் கொடுக்கால் நறுக்கி இருதுண்டாக்கிவிட்டுக் குளத்தில் விழுந்து சுகமே இருந்தது.



## 15. யானையும் தையற்காரனும்.

ஓரூரில் ஒரு யானைப்பாகன் இருந்தான். அவன் வெகு சாதுவான யானை ஒன்றினை வளர்த்துவந்தான். அந்த யானை ஒருவருக்கும் தீங்கு செய்ததே இல்லை. அது வெகு நல்ல யானை. எவர் அதன் அருகில் போனபோதிலும் அவர்களை ஒன்றும் செய்வதில்லை. குழந்தைகள் அதன் அருகிற்

சென்று தேங்காய், கரும்பு, விளாம்பழம் முதலியவைகளைக் கொடுத்தாலும் அது சாந்தமாகவே வாங்கித் தின்னும். யாராவது துட்டு கொடுத்தால் அதை வாங்கிப் பாகனிடம் கொடுக்கும்.

அவ்வளவு சாதுவான யானையை அந்தப் பாகன் வைத்து வளர்த்துவந்தமையால் அவனுக்கு ஏராளமாகப் பணமும் மற்றைய பொருள்களும் சேர்ந்துவந்தன. அவன் குளிப்பாட்ட ஆற்றுக்கு அழைத்துப்போகையில் கடைவீதி வழியாகச் செல்வான். அப்பொழுது அங்குள்ள கடைக்காரரெல்லாம் அந்த யானைக்கு ஏதாவது தின்பண்டம் கொடுப்பார்கள். ஒரு கடைக்காரன் தேங்காய் கொடுத்தால் மற்றொருவன் வெல்லம் கொடுப்பான்; வேறொருவன் பச்சரிசிக் கவளம் கொடுப்பான்; இன்னுமொருவன் கரும்பு கொடுப்பான். இப்படிப் பலபேர் பலவிதமாகக் கொடுப்பார்கள். இவர்களெல்லாம் இப்படிக் கொடுத்து வழக்கப்படுத்தினபடியினலே அந்த யானை கடைவீதியாகப் போகும்போது ஒவ்வொரு கடையிலும் தன் தும்பிக்கையை நீட்டும். தும்பிக்கையை நீட்டும்போது உடலை அசைத்துக்கொண்டே இருக்கும். உடல் அசையும்போது அதன் இருபக்கங்களிலும் உள்ள மணி மாறி மாறிச் சத்தித்துக்கொண்டே இருக்கும். அந்த மணி சத்திக்கும்போதெல்லாம் அடுத்த கடைகளில் உள்ள வியாபாரிகளெல்லாம், "யானைவரும் பின்னே மணியோசைவரும் முன்னே" என்னும் பழமொழியைச் சொல்வார்கள்.

இந்தப் பிரதாபமெல்லாம் உண்டாகும்படி நீட்டிய தொளைக்கையில் தந்த பொருள்களிற் சிலவற்றைத் தானே தின்னும்; சிலவற்றைப் பாகனுக்குக் கொடுக்கும். அவர்கள் பணம் கொடுத்தால் அதை உடனே அவனிடம் சேர்க்கும்.

இப்படி ஆற்றுக்குப் போகும்போதும் ஆற்றிலிருந்து திரும்பும்போதும் அந்த யானைக்கு ஏதாவது கொடுத்துவரும் கடைக்காரருள் தையற்காரன் ஒருவன் இருந்தான். அவனுடைய கடையும் அந்தக் கடைவீதியிலேயே இருந்தது. அவன் பிரபுக்கள்வீட்டுத் தையற்காரன். அவ்வூரிலுள்ள பிரபுக்களும் பணக்காரரும் ஏதாவது தமக்கு

உடைகள் வேண்டியிருப்பின் அந்தத் தையற்காரனையே கூப்பிட்டு உடைகள் தைக்கும்படி உத்தரவு செய்வார்கள். அவனும் அவர்கள் விருப்பப்படி நல்ல உடைகள் தைத்துக் கொடுப்பான். இவன் கடையில் எப்பொழுதும் பலவித வர்ணப்பட்டுத் துணிகள் நிறைந்திருக்கும். பட்டுக்கடையில் பார்க்கவேண்டிய பட்டுக்களையெல்லாம் இவன் கடையில் நன்றாகப் பார்க்கலாம்.

இப்படிப்பட்ட பிரபலமான அந்தத் தையற்காரன் யானைப்பாகனுக்கு நண்பன். அவனும் அந்த யானைக்குப் பிரதிதினம் ஏதாவது கொடுப்பது வழக்கம். அதுவும் அவன் கடையண்டை வந்து ஜன்னலின் வழியாகத் தன் தும்பிக்கையை நீட்டுவது வழக்கம். பாகனும் அவ்விடத்தில் யானையை நிறுத்தி வெகுநேரம் தையற்காரனோடு பேசுவதும் வழக்கம்.

ஒருநாள் அத் தையற்காரன் யானையோடு குறும்பாக விளையாட எண்ணி, அது தும்பிக்கையை நீட்டியபோது, வழக்கப்படி கொடுக்கும் பழம் முதலியவற்றைக் கொடாமல், துணிதைக்கும் ஊசியால் அதன் தும்பிக்கையில் குத்தினான். அக்குத்து அதற்கு நோவினை யுண்டுபண்ணினது. அதனால் அது மனவருத்தப் பட்டுக்கொண்டே, மெதுவாக, நீட்டிய தும்பிக்கையை வெளியே எடுத்துக்கொண்டு, அப்போது அவனை ஒன்றும் செய்யாமல் ஆற்றுக்குப் போய் விட்டது.

ஆற்றுக்குச் சென்ற யானை, அதில் நன்றாகக் குளித்து, தனக்கு வேண்டியமட்டும் நீரைப் பருகினது. பிறகு, அது ஜலத்தை நன்றாய்க் கலக்கிச் சேறாக்கி, தன் துதிக்கை நிறைய முகந்துகொண்டது. அது அப்படி முகந்ததைப் பாகன் கவனிக்கவில்லை. அவன் வழக்கப்படி யானையைத் தையற் கடையண்டை கொண்டுவந்து நிறுத்தினான். அப்போது தையற்காரன் விலையுயர்ந்த பட்டுச்சட்டைகள் தைத்துக் கொண்டிருந்தான். அதுகண்ட யானை, தான் முகந்து வந்த சேற்றுநீரை ஜன்னலின் வழியாக அவன் முகத்தில் வீசிற்று. அதனால், பட்டாடைகளெல்லாம் சேற்றுடைகளாயின. தையற்காரன் தன் குற்றத்தை யுணர்ந்து மிகவும் விசனப் பட்டான்.



# 16. வளைமூக்கன்.

முதல்பாகம்.

ஓரூரில் சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு நாள் தன் தாயினிடம் ஓடி அவள் கையில் ஒரு தம்படியைக் கொடுத்து, "அம்மா, அம்மா, கடைக்குப் போய் கோதுமை மா, கடலைப்பருப்பு, நெய், சர்க்கரை மற்று எல்லாம் இந்தக் காசுக்கு வாங்கிவந்து எனக்கு நூறு வடை சுட்டுத் தரவேண்டும்," என்று கேட்டான்.

அவள் அந்த வார்த்தையைக் கேட்டுக் கோபமுற்று, "முட்டாள் மகனே, இந்த ஒரு காசைக்கொண்டு எதை வாங்கமுடியும்? அப்படி வாங்கினாலும் ஒரு பொருள் வாங்கக்கூடும். அந்தப் பொருளும் வெகு சொற்பமாகவே கிடைக்கும். அப்படியிருக்கையில் நீயோ ஒரு காசினுக்கு எல்லாப் பொருளும் வேண்டுமென்கிறாய்; அவைகளையும் அதிகமாகப் பெறவேண்டுமென்கிறாய். இக்காரியம் என்னால் ஆகாது. ஒரு காசைக்கொண்டு நீயே உன் இஷ்டப்படி நூறு வடை சுட்டுத்தின்," என்று சொல்லி அக்காசை அவன் முகத்தில் விசிறி எறிந்தாள்.

அந்தக் காசினை எடுத்துக்கொண்டு அச்சிறுவன் ஒரு கடைக்குச் சென்று, "செட்டியாரே, செட்டியாரே, இந்த ஒரு காசுக்கு என் மூக்கின் ஒரு நாசித்தொளை நிறைய கோதுமைமா போடுவாயோ?" என்றான்.

"அப்படியே ஆகட்டும்," என்று சொல்லிக் காசை வாங்கிக்கொண்டு அவன் நாசித்தொளை யொன்றில் இரண்டு மூன்று சிட்டிமாவை எடுத்துப் போட்டான். அந்த மா விழுந்த இடமே தெரியவில்லை. பிறகு காலாழாக்கு என்னும் கருவி யொன்றை எடுத்து அக்கருவி நிறைய மாவை அளந்து அவன் மூக்கில் கொட்டினான். அதுவும் அப்படியே ஆயிற்று. பிறகு அரையாழாக்கினால் அளந்து கொட்டினான். அந்த மாவும் பழையபடி மறைந்தது. அதன்பிறகு ஆழாக்கினால் அளந்து சாய்த்தான். அந்த மாவும் மறைந்தது. அதற்குப்பின் படி எடுத்து அளந்துபோட்டான் அந்தப் படிமாவும் ஒரு நிமிஷத்திற்குள் உள்ளடங்கிவிட்டது.

விதம் விதமான அளவு கருவிகளால் அளந்து கொட்டப் பட்ட மாவெல்லாம் உள்ளடங்கியதைப் பார்த்துச் செட்டி, "இது என்ன வளைமூக்கோ!" என்று சொல்லிவிட்டு, "இன் னும் எவ்வளவுதான் பிடிக்கிறதோ நான் பார்க்கிறேன்" என்று ஐந்தாறுமுறை படியால் அளந்து கொட்டினான். என்ன கொட் டியும் அந்த மூக்கு நிறையவில்லை. அதைக்கண்டு ஆச் சரியப்பட்டு, "அப்பா தம்பி, உன் நாசித்தொளையில் எவ் வளவும் கொள்ளும்போலிருக்கிறது; உன் நாசித்தொளை யைத் தூர்க்க நம்மாலாகாது. நீ போய்வா," என்றான்.

"என் நாசித்தொளை நிறைய மாவைப் போடுவதாக அல்ல வோ சொல்லிக் காசை வாங்கினாய்? இப்பொழுது மாட் டேன் என்பது ஒழுங்குதானோ? நாசிநிறைய மாவையே போட வேண்டும். அப்படிப் போடத் தவறிவிட்டால் என் காசை என்னிடம் கொடுக்கவேண்டும்," என்றான்.

அவன் ஒழிந்தால் போதுமென்று அந்தக் காசைக் கொடு த்து ஒரு கும்பிடும்போட்டு அனுப்பினான்.

காசை வாங்கிக்கொண்ட அந்தச் சிறுவன் கடலைப்பருப்பு விற்கும் செட்டியினிடம் சென்று, "செட்டியாரே, செட்டி யாரே, எனது இடதுமூக்கு நிறையும்படி இந்த ஒரு காசுக்குக் கடலைப்பருப்புப் போடுவாயோ?" என்று கேட்டான்.

அதற்குச் செட்டி ஒப்புக்கொண்டு முதலில் ஒரு பிடி பருப்பெடுத்து அவன் மூக்கில் கொட்டினான். அது ஒரு சுரங்கத்துள் மறைவதுபோல மறைந்தது. அதன்பிறகு ஆழாக்கினால் அளந்து போட்டான். அந்தப் பருப்பும் அப் படியே மறைந்தது. அதற்குப் பிறகு படியினால் அளந்து போட்டான். பருப்பு விழுந்த இடமே தெரியவில்லை. இப் படி ஐந்தாறுமுறை போட்டானதும், பையனைப்பார்த்து, "தம்பி, உன் மூக்கைப் பிலமூக்கு என்றே சொல்லவேண் டும்போலிருக்கிறது. உன் மூக்கை நிரப்ப எம்மாலாகாது. இதுவரை எத்தனையோ ரூபாய் பெறுமான பருப்பைக் கொட்டியிருக்கிறேன். இன்னமும் கொட்ட யாராலாகும்! கிடைத்ததை எடுத்துக்கொண்டு சந்தோஷமாகப் போய்வா," என்று சொன்னான்.

"செட்டியாரே, நீர் பேசுவது ஒழுங்கல்ல; வியாபாரியா யிருப்பவர் சொல்தவறி நடக்கக்கூடாது. நீர் என் நாசித் தொளையை நிரப்புவதாகச் சொல்லிக் காசை வாங்கிவிட்டு, இப்பொழுது அவ்வேற்பாட்டைக் கடந்து நடக்கலாமோ? பழைய ஏற்பாட்டின்படி எத்தனை சவரன் பெறுமான பருப் பைக்கொண்டாலும் அவ்வளவையும் போட்டே தூர்க்க வேண்டும். அல்லாவிடில் என் காசை என்னிடம் மீட்டும் கொடுத்துவிடவேண்டும்," என்றான் பையன்.

அதைக்கேட்ட பருப்புவிற்கும் கோமட்டி, "என்னை இவ்வளவில் விட்டால் போதும் அப்பனே," என்று சொல் லிப் பையனிடம் காசைக் கொடுத்து அனுப்பிவிட்டான்.

பையன் காசுடன் வீட்டிற்குவந்து தன் நாசித்தொளை களிலிருந்த கடலைப்பருப்பையும் கோதுமைமாவையும் தனித் தனியே கொட்டிவிட்டு, மறுபடியும் கடைத்தெருவிற்குப் போய்ச் சர்க்கரை மண்டிக்குள் நுழைந்து, அம்மண்டிக்கா ரனைப் பார்த்து, "ஐயா, ஒரு காசுக்கு என் மூக்கு நிறையச் சர்க்கரை கொட்டுவாயோ?" என்று கேட்டான்.

"அதற்கு என்ன தடை!" என்று சொல்லிக் கடைக் காரன் காசை வாங்கிக்கொண்டு, கொஞ்சம் சர்க்கரை எடுத்து அவன் மூக்கில் கொட்டினான். கொட்டியும் மூக்கு நிறைய வில்லை. பிறகு ஐந்து பலமளவு சர்க்கரை யெடுத்துக் கொட் டினான். கொட்டி என்ன பலன்? மூக்கு நிறையவில்லை. அதன்பின் வீசை வீசையாக நிறுத்துக் கொட்டினான். கொட்டியும் அவன் மூக்கு நிரம்பினபாடில்லை. அதற்குப் பிறகு பையனைப் பார்த்து, "அப்பா தம்பி, உன் மூக்கு இப்படிப்பட்ட சுரங்கமூக்கென்று எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் இந்த ஏற்பாட்டுக்கு ஒத்துக்கொண்டிருக்க மாட்டேன்," என்றான் கடைக்காரன்.

"இப்பொழுது என்ன செய்யப்போகிறீர்? என் மூக்கு நிறையும்படி சர்க்கரை கொட்டமாட்டீரோ? அப்படிக் கொட் டாவிட்டால் என் காசை என்னிடம் கொடுத்துவிடவேண் டும்," என்றான் பையன்.

அதுகேட்ட செட்டி, "இதுவே போதும்," என்று சொல்லிக் காசைக் கொடுத்து அனுப்பிவிட்டான்.

அந்தக் காசுடன் அப்பையன் நெய்விற்கும் மண்டிக்குள் நுழைந்து, "ஐயா, என் காசை வாங்கிக்கொண்டு, இந்த ஒரு தொளையை நெய்யினுல் நிரப்புவீரா?" என்று கேட்டான்.

"ஆ! ஆ! அப்படியே!" என்று சொல்லிக் காசை வாங்கிப் பெட்டிக்குள் போட்டுக்கொண்டு, அவன் மூக்கில் கொஞ்சம் நெய்யை யூற்றினுன். அது ஒரு மூலையில் ஒட்டிக் கொண்டது. பிறகு ஐந்துபலம், பத்துப்பலம், அரைவீசை, வீசை, மணங்கு என்னும் நிறைகளில் ஒவ்வொரு நிறை கருவியையும் போட்டு நிறுத்து, நிறுத்து எடுத்தூற்றினுன். எவ்வளவு ஊற்றியும் பாதி மூக்குக்கூட நிறையவில்லை. அதைக்கண்ட மண்டிக்காரன், "இது நல்ல வியாபாரந்தான்! இதில் எனக்கு நல்ல இலாபம் கிடைத்துவிட்டது! கிடைத்த லாபம் போதும். நீ போய்வா," என்றுன்.

அவன், "என் மூக்கில் எத்தனை சித்தை நெய் பிடித்த போதிலும் நீர் ஊற்றியே தீரவேண்டும். அல்லாவிடில் என் காசைக் கொடும்," என்றுன்.

"அப்பா மகனே. உனக்குப் பல சலாம். உன் காசைச் சந்தோஷமாகவே தருகிறேன்; எடுத்துக்கொண்டு போ," என்று காசைக் கொடுத்து அனுப்பினுன்.

அக்காசுடன் அப்பையன் வீட்டிற்குச் சென்று இரண்டு பெரிய பாத்திரங்களெடுத்து ஒன்றில் சர்க்கரையையும் மற்றொன்றில் நெய்யையும் கொட்டி அவற்றைத் தன் தாயாரிடம் கொடுத்து, "அம்மா, இப்பொழுதாவது நூறு வடை சுட முடியுமா?" என்று கேட்டு அக்காசையும் அவள் கையில் கொடுத்தான்.

அவள் சாமான் கிடைத்தவகையைக் கேட்டாள். அவன் தான் வாங்கிவந்த விதத்தினை எடுத்துரைத்தான். அவள் கேட்டு ஆச்சரியப்பட்டு அவனுக்கு நூறு வடை சுட்டுக் கொடுத்தாள்.

---

## வளைமூக்கன்.

### இரண்டாம் பாகம்.

**வ**டை சுட்டுத்தின்ற சிலநாளைக்கெல்லாம் அரசன்மகளை மணஞ் செய்துகொள்ளவேண்டும் என்னும் எண்ணம் அந்த வளைமூக்கனுக்கு உண்டாயிற்று. எண்ணம் உண்டாகவும் அவன் தன் தாயைப்பார்த்து, "அம்மா, அரசனிடம் போய் அவன் மகளை எனக்குக் கொடுக்கும்படி கேளும். அவன் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளவேண்டும் என்னும் ஆசை எனக்கு அதிகமாக இருக்கிறது," என்று சொன்னான்.

அதைக்கேட்ட அவன்தாய், "ஓ பித்தனே, இவ்வித மான வார்த்தைகளை இன்னொருமுறை சொல்லாதே. இவ் வார்த்தைகள் அரசன்காதிற் படுமாயின் அரசன் உன்னை யானைக்காலிலிட்டு இடறவைப்பான்," என்றாள்.

"நீர் பெண்பேசிக் கலியாணம் செய்து வைக்காவிட்டால் நானேபோய்ப் பேசிக் கட்டிக்கொள்ளுகிறேன்," என்று சொல்லிவிட்டு வெளியே போனான். வெளியே போகையில் வழியிலிருந்த ஏழு சமுத்திரத்து ஜலத்தையும் இரண்டு தொளைகளில் நிறைத்துக்கொண்டு, ஒரு தொளைக்குச் சிங்கத் தையும் மற்றொரு தொளைக்குப் புலியையும் மூடியாகத் துறுத்து வைத்தான்.

பிறகு அந்த ஜலத்துடனும் அந்த மிருகமூடியுடனும் அரச னுடைய அரண்மனையையடைந்து அரசனைப்பார்த்து, 'அரசே, தங்களுடைய மகளை யான் கலியாணம் செய்துகொள்ள ஆசைப்படுகிறேன். நீர் விவாகம் செய்துகொடுப்பீரோ?' என்று கேட்டான்.

அவ்வார்த்தைகளைக் கேட்டதும் அரசனுக்குக் கோபம் மூண்டது. அவன் தன் சேவகனைப்பார்த்து, "இந்தக் குள் ளப்பையலைக் கோழிக்கூட்டில் அடை," என்று உத்தரவு செய்தான். அரசன் உத்தரவிட்டதும் சேவகன் அவனை அழைத்துப்போய்க் கோழிக்கூட்டில் அடைத்துவைத்தான்.

கூட்டில் அடைபட்டுள்ள வளைமூக்கன் நடுராத்திரியில் எல்லோரும் தூங்கும் சமயத்து மெதுவாகக் கூட்டிற்குள் எழுந்து உட்கார்ந்து, தன் மூக்குத் தொளைகளு ளொன்றில்

அடைத்துவைத்திருந்த சிங்கத்தை வெளியில் விட்டான். அதன்பிறகு மற்றொரு துவாரத்தில் அடைத்துவைத்திருந்த புலியை எடுத்து விட்டான். அந்த இரண்டு மிருகங்களும் கோழிக்கூட்டைத் தள்ளிக்கொண்டு வெளியே வந்தன. வந்ததும் சிங்கம் கர்ச்சித்தது. அதன்பிறகு புலி உறுமிற்று. இந்த இரண்டு மிருகங்களின் சத்தத்தைக் கேட்டு அரண்மனையில் இருந்தவர்களெல்லோரும் நடுங்க ஆரம்பித்தனர்.

அச்சமயத்தில் சங்கதி என்ன என்று விசாரிக்க அரசன் சேவகனுடன் வெளியே வந்தான். அப்பொழுது வளைமூக்கன் தன் மூக்கிலிருந்த எழுகடல் நீரையும் அரசன்மீதும் அவன் சேவகன்மீதும் சொரிந்தான். இருவரையும் அந்தக் கடனீர் அடித்துத் தள்ளிக்கொண்டு போய்விட்டது. உடனே வளைமூக்கன் அரண்மனைக்குட் சென்று அரச குமாரியை அழைத்துக்கொண்டு தன் வீட்டிற்கு வந்து, அவளைக் கலியாணஞ் செய்துகொண்டான்.



## 17. எறும்பும் முகட்டுப்பூச்சியும்.

ஓரூரில் ஒரு எறும்பும் ஒரு முகட்டுப்பூச்சியும் வெகு அன்னியோன்னியமாக இருந்துவந்தன. அப்படி இருக்கும் நாட்களில் ஒருநாள் அவ்வூரில் திருவிழா ஒன்று நடந்தது. அந்தத் திருவிழாக்காலத்தில் அவ்வூராரெல்லாம் அங்கிருந்த சோலையிற் கூடிச் சமையல்செய்து சாப்பிட்டனர். அப்பொழுது அந்த முகட்டுப்பூச்சி எறும்பைப்பார்த்து, "நண்பனே, எல்லோரும் சமையல்செய்து சாப்பிடுகையில் நாம்மாத்திரம் சும்மா இருப்பானேன்? நீ போய்ச் சமையலுக்கு வேண்டிய காய்கறிகள் சம்பாதித்துக்கொண்டுவா," என்று சொல்லிற்று.

அப்படியே எறும்பும் கொண்டுவந்து கொடுத்தது. பாயசத்திற்காகப் பாலை அடுப்பில் ஏற்றினது. பால் காய்ந்து கொண்டிருக்கையில் மெதுவாக எறும்பு பால்காயும் பாத்திரத்தின்மீதேறிப் பாலை எட்டிப் பார்த்தது. எட்டிப்பார்க்கையில் கால்வழுக்கி எறும்பு பாலில் விழுந்து செத்தது. அப்பொழுது முகடு அழ ஆரம்பித்தது.

அச்சமயத்தில் காகம் ஒன்று பறந்துவந்து, "மாமா, மாமா, ஏன் அழுகிறாய்?" என்று கேட்டது.

அதற்கு முகடு, "எறும்பு செத்ததனால் முகடு அழுகிறது; முகடு அழுவதைக் காணும் காகத்தின்கண் பொட்டையாகக் கடவது," என்று சொல்லிற்று. உடனே காகத்தின்கண் பொட்டையாயிற்று.

அந்தப் பொட்டைக்கண் காகத்தைக் கண்ட விளாமர மொன்று, "காகமே, காகமே, உன் கண் ஏன் பொட்டையா யிற்று?" என்று கேட்டது.

அதற்கு அந்தக் காகம், "எறும்பு செத்ததனால் முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின்கண் பொட் டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளா மரம் உலரக்கடவது." என்று சொல்லிற்று. உடனே விளா மரம் உலர்ந்துவிட்டது.

பிறகு அந்த விளாமரம் உலர்ந்திருப்பதைக்கண்ட யானை யொன்று, "விளாமரமே, விளாமரமே, நீ ஏன் உலர்ந்துவிட் டாய்?" என்று கேட்டது.

அதற்கு அந்த விளாமரம், "எறும்பு செத்ததனால் முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின்கண் பொட் டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளா மரம் உலர்ந்தது; விளாமரம் உலர்ந்ததைக்கண்ட யானையின் மத்தகம் பிளக்கக்கடவது," என்று சொல்லிற்று. உடனே மத்தகம் பிளந்தது.

பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானை ஆற்றுக்கு நீர் அருந்தச் சென்றது. அங்கு அந்த ஆறு, "யானையே, யானையே, ஏன் உன் மத்தகம் பிளந்திருக்கிறது?" என்று கேட்டது.

அதற்கு அந்த யானை, "எறும்பு செத்ததைக்கண்டு முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின்கண் பொட் டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளா மரம் உலர்ந்தது; விளாமரம் உலர்ந்ததைக்கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானை யைக்கண்ட ஆறு வறளக்கடவது," என்று சொல்லிற்று. உடனே ஆறு வறண்டது.

அந்த ஆற்றில் குளிக்க அரசன்மருகி தவலையுடன் வந்தாள். அவள் அந்த ஆற்றைப்பார்த்து, "ஆறே, ஆறே, ஏன் இப்படி வறண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

அதற்கு அந்த ஆறு, "எறும்பு செத்ததைக்கண்டு முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின்கண் பொட்டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளாமரம் உலர்ந்தது; விளாமரம் உலர்ந்ததைக்கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானையைக்கண்ட ஆறு வறண்டது; வறண்ட ஆற்றைக்கண்ட அரசன் மருகியின் சும்மாடு தலையில் ஒட்டிக்கொள்வதாக," என்று சொல்லிற்று. உடனே சும்மாடு ஒட்டிக்கொண்டது.

அதைக்கண்ட அவள் மாமியார், "அது என்ன? ஏன் ஒட்டிக்கொண்டிருக்கிறது?" என்று கேட்டாள்.

அப்பொழுது அரசன் மருகி, "எறும்பு செத்ததைக்கண்ட முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின் கண் பொட்டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளாமரம் உலர்ந்தது; உலர்ந்த விளாமரத்தைக்கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; யானையின் பிளவுபட்ட மத்தகத்தைக்கண்ட ஆறு வறண்டது; வறண்ட ஆற்றைக்கண்ட அரசன் மருகியின் சும்மாடு ஒட்டிக்கொண்டது; ஒட்டிக்கொண்ட சும்மாட்டையுடைய அரசன் மருகியைக்கண்ட மாமியின் கையில் கரண்டி ஒட்டிக்கொள்வதாக," என்று சொன்னாள். கரண்டி அப்படியே ஒட்டிக்கொண்டது.

அச்சமயத்தில் அரசகுமாரன் சாப்பிடவந்து உட்கார்ந்தான். உட்கார்ந்தபோது கரண்டி கையில் ஒட்டிக்கொண்ட காரணத்தைக் கேட்டான்.

அப்போது அரசி, "எறும்பு செத்ததைக்கண்ட முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின்கண் பொட்டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளாமரம் உலர்ந்தது; உலர்ந்த விளாமரத்தைக்கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானையைக்கண்ட ஆறு வறண்டது; வறண்ட ஆற்றைக்கண்ட அரசன் மருகியின் சும்மாடு தலையில் ஒட்டிக்கொண்டது; ஒட்டிக்கொண்ட சும்மாட்டையுடைய அரசன் மருகியைக்கண்ட

மாமியின் கையில் கரண்டி ஒட்டிக்கொண்டது; அரசியின் கையில் கரண்டி ஒட்டிக்கொண்டதைக்கண்ட அரசகுமாரனுக்கு மணை ஒட்டிக்கொள்வதாக." என்று சொன்னாள். மணை அப்படியே ஒட்டிக்கொண்டது.

அந்தச்சமயத்தில் அரசன் தன் குமாரனை அழைத்து வரும்படி சேவகனை அனுப்பினான். சேவகன் அரசகுமாரனிடம் வந்தான். அரசகுமாரனுடைய பிருஷ்டத்தில் மணை ஒட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்தான். பார்த்ததும், "இளவரசே, என்ன சங்கதி?" என்று கேட்டான்.

அப்போது அரசகுமாரன், "எறும்பு செத்ததைக்கண்ட முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின் கண் பொட்டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளாமரம் உலர்ந்தது; உலர்ந்த விளாமரத்தைக் கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானையைக்கண்ட ஆறு வறண்டது; வறண்ட ஆற்றைக்கண்ட அரசன் மருகியின் சும்மாடு தலையில் ஒட்டிக்கொண்டது; ஒட்டிக்கொண்ட சும்மாட்டையுடைய மருகியைக்கண்ட மாமியின் கையில் கரண்டி ஒட்டிக்கொண்டது; கரண்டி ஒட்டிக்கொண்ட அரசியைக்கண்ட இளவரசனுக்கு மணை ஒட்டிக்கொண்டது; மணை ஒட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்த சேவகன் தோளில் தடி ஒட்டிக்கொள்வதாக," என்றான். உடனே தடி சேவகன் தோளில் ஒட்டிக்கொண்டது.

பிறகு சேவகன் இளவரசை அழைத்துக்கொண்டு அரசனிடம் போனான். சேவகன் போனசமயத்தில் அரசன் நந்தவனத்தில் ஒரு சிங்காசனம்போட்டு உட்கார்ந்துகொண்டிருந்தான். அரசன் உட்கார்ந்துகொண்டிருக்கையில் எருது ஒன்று வந்து அங்கிருந்த பூஞ்செடிகளையெல்லாம் மேய ஆரம்பித்தது. அரசன் அதைப்பார்த்து மனந்தாளாது சேவகனைக் கூவியழைத்து, மாட்டை அடித்துத் துரத்தும்படி சொன்னான். மாட்டை அடித்துத் துரத்தத் தடி எடுத்தான். தடி எடுக்க முடியவில்லை. அப்பொழுது அரசன், "என்ன சங்கதி?" என்று கேட்டான்.

அப்போது சேவகன், "எறும்பு செத்ததைக்கண்ட முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின் கண் பொட்டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளா

மரம் உலர்ந்தது; உலர்ந்த விளாமரத்தைக்கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானையைக்கண்ட ஆறு வறண்டது; வறண்ட ஆற்றைக்கண்ட அரசன் மருகியின் தலையில் சும்மாடு ஒட்டிக்கொண்டது; ஒட்டிக்கொண்ட சும்மாட்டையுடைய மருகியைக்கண்ட மாமியின் கையில் கரண்டி ஒட்டிக்கொண்டது; கரண்டி ஒட்டிக்கொண்ட அரசியைக்கண்ட இளவரசனுக்கு மணை ஒட்டிக்கொண்டது; மணை ஒட்டிக்கொண்டதைக் கண்ட சேவகனுக்குத் தடி தோளில் ஒட்டிக்கொண்டது; தடி தோளில் ஒட்டிக்கொண்டதைக்கண்ட அரசனுடைய பிருஷ்டத்தில் சிங்காசனம் ஒட்டிக்கொள்வதாக," என்று சொன்னான். அப்படியே சிங்காசனம் ஒட்டிக்கொண்டது.

அந்தச் சமயத்தில் வண்ணான் வந்து, கட்டிக்கொண்டிருக்கும் துணியை யவிழ்த்துத் தரும்படி அரசனைக் கேட்டான். அரசன் எழுந்திருக்க முயன்றான்; எழுந்திருக்க முடியவில்லை.

அதைப்பார்த்த வண்ணான், "மகாராஜாவே, என்ன சங்கதி?" என்றான்.

அப்போது அரசன், "எறும்பு செத்ததைக்கண்ட முகடு அழுதது; முகடு அழுததைக்கண்ட காகத்தின் கண் பொட்டையாயிற்று; கண் பொட்டையான காகத்தைக்கண்ட விளாமரம் உலர்ந்தது; உலர்ந்த விளாமரத்தைக்கண்ட யானையின் மத்தகம் பிளந்தது; பிளவுபட்ட மத்தகத்தையுடைய யானையைக்கண்ட ஆறு வறண்டது; வறண்ட ஆற்றைக்கண்ட அரசன் மருகியின் தலையில் சும்மாடு ஒட்டிக்கொண்டது; தலையில் ஒட்டிக்கொண்ட சும்மாட்டையுடைய மருகியைக்கண்ட மாமியின் கையில் கரண்டி ஒட்டிக்கொண்டது; கையில் கரண்டி ஒட்டிக்கொண்டிருக்கும் அரசியைக்கண்ட இளவரசனுக்கு மணை ஒட்டிக்கொண்டது; மணை ஒட்டிக்கொண்டதைக்கண்ட சேவகனுக்குத் தடி தோளில் ஒட்டிக்கொண்டது; தடி தோளில் ஒட்டிக்கொண்டதைக்கண்ட அரசனுக்கு சிங்காசனம் ஒட்டிக்கொண்டது; சிங்காசனம் ஒட்டிக்கொண்ட அரசனைக்கண்ட வண்ணானுடைய மூட்டை....." என்று சொல்லி வாக்கியத்தை முடிக்குமுன் வண்ணான் தன் மூட்டையைக் கீழே போட்டுவிட்டான். உடனே சிங்காசனம் அர

சனுடைய பிருஷ்டத்தை விட்டு நீங்கிற்று; சேவகனுடைய தோளைவிட்டுத் தடி நீங்கிற்று; இளவரசனுடைய பிருஷ்டத்தில் ஒட்டிக்கொண்டிருந்த மணை நீங்கிற்று; அரசியின் கையில் ஒட்டிக்கொண்டிருந்த கரண்டி கையைவிட்டு நீங்கிற்று; அரசன் மருகியின் தலையிலிருந்த சும்மாடு அவள் தலையைவிட்டு நீங்கிற்று; வறண்டிருந்த ஆற்றில் ஜலம் பெருகிற்று; பிளவுபட்டிருந்த யானையின் மத்தகம் கூடிற்று; உலர்ந்திருந்த விளா மரம் தளிர்த்தது; காகத்திற்குக் கண் கிடைத்தது; முகடு அழுவதை விட்டது; பாவில் விழுந்து இறந்த எறும்பு உயிர்பிழைத்தது. எறும்பும் முகட்டுப்பூச்சியும் பழையபடி சந்தோஷமாக வாழ்ந்துவந்தன.





## 18. நீலநரி.

ஓரூரில் ஒரு நரி இருந்தது. அதற்குக் கோழிகளின்மீது பிரியம் அதிகம். அது கோழி வளர்ப்பவர் வீடுகளில் நுழைந்து கோழிகளையெல்லாம் வாழைப்பழம்போலப் புசிப்பது

வழக்கம். இவ்விதமாகச் செய்துவரும்நாளில் ஒருநாள் ஒரு பெரிய பணக்காரனுடைய வீட்டுக்குள் நுழைந்து கூடைக்குள் அடைக்கப்பட்டிருக்கும் கோழிகளையெல்லாம் மெதுவாகப் பிடித்துக் கொன்று தின்ன ஆரம்பித்தன. அச்சமயத்தில் சேவல்களெல்லாம் வாய்திறந்து கூவின.

"கோழிகள் பொழுதுவிடியும் வேளையில் கூவாது நள்ளிரவில் ஏன் கூவுகின்றன? அவை விடியல் அறிவிக்கக் கூவுவது போலக் கூவவில்லையே! வேறுவிதமாகக் கூவுகின்றனவே! அவைகட்கு ஏதோ தீங்கு சம்பவித்திருப்பதுபோலத் தெரிகிறது," என்று எண்ணி வீட்டுக்காரன் தடியுடன் வந்தான். தடியுடன் வந்த வீட்டுக்காரன் கூட்டில் நரி கோழிகளைக் கொன்றுதின்பதைப் பார்த்துத் தன் தடியால் அதை நையப் புடைத்தான்.

நன்றாகப் புடைக்கப்பட்ட நரி வழிதுறை அறியாது, உயிர் தப்பினால் போதும் என்றோடிற்று. அப்படி ஓடுகையில் அது வழிதுறை தப்பி ஒரு நீலத்தொட்டியில் விழுந்தது. தொட்டியில் விழுந்த நரி எழுந்து அங்கிருந்த வாய்க்காலின் வழியாகக் காட்டுக்குள் நுழைய ஓடிற்று. அப்படி ஓடுகையில் பொழுது புலர்ந்தது. கிழக்கே சூரியன் உதித்தான். சூரியன் உதித்ததும் தன் நிழல் வாய்க்கால் நீரில் தெரிந்தது. அதைக் கண்டதும் அதற்கு ஒருவித பயங்கரம் உண்டாயிற்று. தன்னுடல் நீலநிறமாயிருத்தலால் தன்னைத் தன் இனத்தவர் சேர்க்க மாட்டார்களென்று அறிந்தது.

அதற்கு ஒரு உபாயம் செய்யவேண்டும் என்று எண்ணி, காட்டுக்குள் நுழைந்து, தன் இனத்தவரையெல்லாம் கூப்பிட்டு, "மித்திரர்களே, தேவர்கள் அடுத்த காட்டிற்கு நேற்றையதினம் வந்திருந்தார்கள். அவர்களுக்குச் சில உதவி நான் புரிந்தேன். அதற்காக அவர்கள் சந்தோஷப்பட்டு, என்னைத் தம்முடைய தேவலோகத்திற்கு அழைத்துச்சென்று விருந்திட்டனர். அதனோடு என்னைத் தம் அரசனெதிரில் கொண்டுபோய் விட்டனர். அவன் என்னைக்கண்டு சந்தோஷித்து, 'ஓ நரியே, உன்னை இன்றுமுதல் உங்கள் அரணியத்திற்குத் தலைவனாக்கினேன். இன்றுமுதல் நீயே அந்தக் காட்டிலுள்ள மிருகங்களுக்கெல்லாம் தலைமை வகிக்கவேண்டும்,'

என்று சொன்னான். அப்பொழுது நான், 'தேவர்களரசே, இவ்வார்த்தைகளை யார் நம்புவது? என் இனத்தவர் நம்பமாட்டார்களே! தங்கள் தயவால் எனக்கு இராஜ்யம் கிடைக்கிறது; அப்படிக் கிடைத்தும் யான் அனுபவிக்க முடியாதே!' என்று சொன்னேன். அப்பொழுது தேவேந்திரன், 'உங்கள் இனத்தவர் நம்புவதற்காக உன் நிறத்தை நீலநிறமாக மாற்றுகிறேன்,' என்று சொல்லி நீலநிறமாக்கினான். உங்கள் இனத்தவனுக்கு இப்பொழுது பட்டம் கிடைத்திருக்கிறது. அதை நீங்கள் எப்படிச் சிறப்புச் செய்யவேண்டுமோ அப்படிச் சிறப்புச் செய்யுங்கள். காட்டிலுள்ள மிருகங்களுக்கெல்லாம் தேவேந்திரன் பட்டம் கொடுத்திருப்பதைத் தெரிவியுங்கள்," என்றது.

அதைக்கேட்ட மற்ற நரிகளெல்லாம் மிகவும் சந்தோஷப்பட்டன. தம் இனத்தவனுக்குப் பட்டம் கிடைத்ததே என்று மகிழ்ச்சியடைந்து கூத்தாடின. பிறகு அவை, நரி மிருகங்களுக்கு அரசாவதைச் சிங்கமும் புலியும் நம்பமாட்டா என்றறிந்து, தேவலோகத்திலிருந்து நீலவரசன் ஒருவன் மிருகங்களுக்குத் தலைவனாக வந்திருக்கிறானெனப் பொதுவாகச் சங்கதி தெரிவிக்கவேண்டுமென்று பேசிக்கொண்டுபோய், அப்படியே விஷயத்தைப் பரவச்செய்தன.

நரிகளின் வார்த்தையைக்கேட்டு எல்லா மிருகங்களும் நம்பின. சிங்கமும் புலியும் நம்பவில்லை. அவைகள் அரசனாக வந்திருப்பவனைக் கண்ணாரப் பார்த்தபின்னே நம்புவதாகச் சொல்லி நீலவரசன் இருக்கும் இடத்திற்கு வந்து பார்த்தன. நேரிற்கண்டதும் நம்பிக்கை உண்டாயிற்று. பிறகு அவைகளும் அவனுக்கு அடங்கி நடந்துவந்தன.

இப்படிச் சில நாட்கள் கழிந்தன. நாள் ஏற ஏற நரிக்குக் கர்வம் அதிகரித்துக்கொண்டே வந்தது. கர்வம் அதிகரிக்கவும் தன் இனத்தவரை மதியாமலும் அவற்றைத் தழுவாமலும் விட்டுவிட்டது. நீலநரி தம்மை மதியாதிருப்பதைக் கண்ட மற்ற நரிகளெல்லாம் ஒன்றுகூடி, "இந்த அற்பனை எப்படித் தொலைப்பது?" என்று ஆலோசித்தன.

அப்பொழுது அந்தக் கூட்டத்திலிருந்த கிழநரி, "இதற்காக நீங்கள் கவலைப்படவேண்டாம்; நான் அவனை நாளைய

தினம் தொலைத்துவிடுகிறேன்," என்று சொல்லி அவைகளை அனுப்பிற்று.

மறுநாள் நீலநரியின் சபையில் எல்லா மிருகங்களும் நெருங்கியிருக்கையில், அந்தக் கிழநரி சந்தோஷத்தால் ஊளையிடுவதுபோல ஊளையிட்டது. கிழநரி ஊளையிடுவதைக் கண்ட மற்ற நரிகளெல்லாம் ஊளையிடத் தொடங்கின. தன் இனத்தவர் ஊளையிடுவதைக் கண்ட நீலநரி தன் நிலைமையை மறந்து அவைகளுடன் ஊளையிட்டது. அப்பொழுது சிங்கமும் புலியும் நரி தந்திரமாகத் தம்மை ஏமாற்றியதென அறிந்து கோபங்கொண்டு உடனே அதைக் கொன்றுவிட்டன.



## 19. ஒரு குருவியும் துவரம்பருப்பும்.

ஒருநாள் ஒரு குருவிக்குத் துவரம்பருப்பு அகப்பட்டது. அதை அது எடுத்துக்கொண்டுபோய் ஒரு உழவனிடம் கொடுத்து வைத்தது. அதை அவன் வீட்டில் வைத்து வைத்தான். அந்தப் பருப்பை அவன் வீட்டிலிருந்த கிழவி யொருத்தி நூல் நூற்றுக்கொண்டே தின்றுவிட்டாள்.

மறுநாள் குருவி உழவனிடம் போய், "என் பருப்பைக் கொடு," என்று கேட்டது.

உழவன், "நூல்நூற்கும் கிழவி தின்றுவிட்டாள்." என்று சொன்னான்.

குருவி, "உழவரே, என் பருப்பையாவது கொடும்; அல்லது அதற்குப் பதிலாக அங்கு நூற்றுவைத்திருக்கும் நூற் சுருணையையாவது கொடும்," என்று கேட்டது.

உழவன் அப்படியே கொடுத்தான்.

நூல் சுருணையை வாங்கிக்கொண்டு அவ்வூரிலிருக்கும் சேணியனிடம் சென்று, "இந்தச் சுருணையைப் பத்திரமாக எடுத்துவை," என்று சொல்லிக் கொடுத்துவைத்தது.

சேணியன் வீட்டில் துணி நெய்யும் சாலியன் துணி நெய்துகொண்டே இருக்கையில் துணி நெய்வதற்கு நூல் குறைவுபட்டது. நூல் குறையவும் அவன் குருவி கொடுத்து வைத்த நூல் சுருளை எடுத்து உபயோகித்துக்கொண்டான்.

அடுத்தநாள் குருவி வந்து தான் கொடுத்துவைத்திருந்த நூல் சுருளைத் தரும்படி கேட்டது.

அதற்குச் சேணியன், "நீ கொடுத்துவைத்த நூலைத் துணி நெய்யும் வேலைக்காரன் துணி நெய்வதற்காக உபயோகித்துக் கொண்டான். இப்பொழுது நான் என்னசெய்வது?" என்று கேட்டான்.

அதற்குக் குருவி, "நான் கொடுத்த நூல் சுருளையயாவது கொடு; அல்லது அங்கு நெய்து வைத்திருக்கும் சிவப்புப் புடைவையையாவது கொடு," என்று கேட்டது.

சேணியன் அப்படியே சிவப்புப் புடைவையைக் கொடுத்தனுப்பினான்.

சிவப்புப் புடைவையை வாங்கிக்கொண்டுபோய் அவ்வூரிலிருக்கும் இடையனிடம் கொடுத்துவைத்தது. இடையன் அதை வாங்கித் தன் பெட்டியில் வைத்தான்.

அதைப் பார்த்திருந்த அவன் மனைவி அதைக் கட்டிக்கொண்டு தன் தாய்வீட்டிற்குப் போய்விட்டாள்.

மறுநாள் குருவி வந்து, "என் சிவப்புப் புடைவையைக் கொடு," என்று கேட்டது.

இடையன் தன் மனைவி கட்டிக்கொண்டு தாய்வீட்டிற்குப் போயிருப்பதாகச் சொன்னான்.

குருவி அவனைப்பார்த்து, "என் சிவப்புப் புடைவையாவது கொடு, அல்லது ஒரு செம்மறியாடாவது கொடு," என்று கேட்டது.

அவன் ஒரு செம்மறியாட்டைக் கொடுத்து அதை அனுப்பினான்.

அந்த ஆட்டை அழைத்துக்கொண்டு அவ்வூர்க் கொத்தவாலிடஞ் சென்று, "இதை எனக்காக உம்முடைய வீட்டில் கட்டிப்போடும்," என்றது.

அவன் அப்படியே முதலில் கட்டிப் போட்டுவைத்தான். பிறகு, அது நன்றாகக் கொழுத்திருப்பதைப் பார்த்து, "இதைச் சமைத்துச் சாப்பிட்டால் ருசியாக இருக்கும் அல்லவா?" என்றெண்ணி, அதை அறுத்துச் சமைத்துச் சாப்பிட்டான்.

மறுநாள் குருவி வந்து, தான் விட்டுவைத்த ஆட்டைத் தரும்படி கொத்தவாலைக் கேட்டது. கொத்தவால் தான் சமைத்துத் தின்றுவிட்டதாகச் சொன்னான்.

சொல்லவும் குருவி, "நீ தின்றால் எனக்கென்ன? என் செம்மறியாட்டைக் கொடு; அல்லாவிடில் உன் சிவப்புக் குதிரையைத் தா," என்று சொல்லிற்று.

அவன் குதிரையைக் கொடுத்துக் குருவியை யனுப்பினான்.

அது அக்குதிரையுடன் அரசனிடம் போய், "இதை உமது இலாயத்தில் கட்டிவையும்," என்று சொல்லிக் கொடுத்தது.

அரசன் அப்படியே இலாயத்தில் கட்டிவைத்தான். அரசன் குதிரையைக் கட்டிவிட்டுப் போனதும், அவன் மகன், அதை அவிழ்த்து, அதன்மீது ஏறிக்கொண்டு தன் மாமியார் வீட்டிற்குப் போய்விட்டான்.

குருவி அடுத்தநாள் வந்து தன் குதிரையைத் தரும்படி கேட்டது.

அதன்மீது தன் மகன் ஏறிக்கொண்டு மாமியார் வீட்டிற்குப் போயிருப்பதாக அரசன் சொன்னான்.

குருவி தன் குதிரை வேண்டுமென்று அழுதது. அப்பொழுது அரசன், "குதிரைக்குப் பதிலாக வேறு ஏதேனும் கேள்." என்று சொன்னன்.

அப்பொழுது குருவி, "என் குதிரையையாவது தாரும். அல்லது உம்முடைய யானையையாவது தாரும்," என்றது.

அரசன் யானையைக் கொடுத்து அக்குருவியை யனுப்பினன்.

அக்குருவி யானையை அழைத்துக்கொண்டுபோய் அவ்வூரிலிருந்த பெரிய வியாபாரி ஒருவனிடம் விட்டுவைத்தது.

அந்த வியாபாரி பணத்தின்மீதுள்ள ஆசையினல் அதை ஒரு சிற்றரசனுக்கு விற்றுவிட்டு ஏராளமாகப் பணம் பெற்றுக் கொண்டான்.

அடுத்ததினம் குருவி செட்டியினிடம் போய்த் தன் யானையைத் தன்னுடன் அனுப்பும்படி கேட்டது.

"தீனிபோடச் சக்தியில்லாமையால் அதை விற்றுவிட்டேன்," என்று சொன்னன்.

அதற்கு அந்தக் குருவி, "என் யானையையாவது கொடு; அல்லது ஒன்றரைபடி பூவராகனையாவது கொடு," என்று வம்பு செய்தது.

செட்டி பதிலொன்றுஞ் சொல்லாமல் ஒன்றரைபடி பூவராகன் கொடுத்தனுப்பினன்.

அந்தப் பூவராகனை வாங்கிக்கொண்டு போய், அந்தக் குருவி, ஒரு ஔவையாரினிடம் கொடுத்துவைத்தது. அதைப் பார்த்துக்கொண்டிருந்த ஔவையாரின் பிள்ளை கிழவி தூங்கும் சமயத்தில் வாரிக்கொண்டு போய்ச் சூதாடி எல்லா வராகனையும் தோற்றுவிட்டான்.

மறுநாள் குருவி ஔவையாரிடம்போய், "யான் கொடுத்து வைத்த பூவராகனைக் கொடு," என்று கேட்டது.

கிழவி, "என் மகன் சூதாடிப் பூவராகனையெல்லாம் தோற்றுவிட்டானே. இப்பொழுது என்னை என்னசெய்யச் சொல்லுகிறய்?" என்று கேட்டாள்.

"நான் கொடுத்துவைத்த ஒன்றரைபடி பூவராகனையாவது கொடு, அல்லது உன்னிடம் இருக்கும் ஒன்றரை அப்பத்தை யாவது கொடு," என்று குருவி கேட்டது.

அப்படியே கிழவி கொடுத்தனுப்பினள். அதை எடுத்துக்கொண்டு போய் அம்பட்டனிடம் கொடுத்துவைத்தது.

அந்த அப்பத்தை அம்பட்டனுடைய மகன் தகப்பனுக்குத் தெரியாமல் எடுத்துத் தின்றுவிட்டான்.

அடுத்ததினம் குருவி வந்து தான் கொடுத்துவைத்த அப்பத்தைத் தரும்படி கேட்டது. அவன் தன் மகன் தின்றுவிட்டதாகச் சொல்லி வருத்தப்பட்டான்.

அப்பொழுது, "நான் கொடுத்துவைத்த ஒன்றரை அப்பத்தையாவது கொடு; அல்லது ஒன்றரைபக்கம் க்ஷவரமாவது செய்," என்று சொல்லிற்று.

அப்படியே ஆகட்டும் என்று அக்குருவியின் தாடியி. ஒன்றரைபங்கு க்ஷவரம் செய்தான்.

அக்குருவி க்ஷவரம் செய்வித்துக்கொண்டு, ஒரு மரத்தி மீது போய் உட்கார்ந்து, "பருப்புப்போய் நூல்சுருணை வந்தது; நூல்சுருணை போய் சிவப்புப்புடைவை வந்தது; சிவப்புப்புடைவை போய் செம்மறியாடு வந்தது; செம்மறியாடு போய்க் குதிரை வந்தது; குதிரை போய் யானை வந்தது; யானை போய் ஒன்றரைபடி பூவராகன் வந்தது; ஒன்றரைபடி பூவராகன் போய் ஒன்றரை அப்பம் வந்தது; ஒன்றரை அப்பம் போய் ஒன்றரை தாடை க்ஷவரம் செய்வித்துக்கொள்ளலாயிற்று," என்று சொல்லிவிட்டு, ஜிவ் என்று பறந்துபோயிற்று.



## 20. மீனும் கிழவியும்

ஓரூரில் கிழவி ஒருத்தி இருந்தாள். அவளுக்குப் பிள்ளையே கிடையாது. அதனால் அவள் ஒரு மீனைப் பிள்ளை போல வளர்த்துவந்தாள். இதைப் பார்த்துக்கொண்டு வந்த அண்டைவீட்டுக் கிழவியொருத்தி, மீன்கிழவி வீட்டில் இல்லாத சமயம்பார்த்து, அவள் வளர்த்துவந்த மீனைத் திருடிப் [illegible] ...மைத்துத் தின்றுவிட்டாள்.



மீன்கிழவி வீட்டுக்குவந்ததும் தன் பிள்ளையைத் தேடினாள். அது அகப்படவில்லை. அகப்படாமற்போகவும் அண்டைவீட்டுக் கிழவியே திருடியிருப்பாளென்று நினைத்து அவளிடம் சண்டையிட்டாள். இவள் சண்டையிடுவதைப் பார்த்து அக்கம் பக்கத்தார் ஓடிவந்தார்கள் அவர்கள் இவர்களுடைய வழக்கை விசாரித்து, அண்டைவீட்டுக் கிழவியே அந்த மீனைத் திருடினவள் என்று கண்டறிந்தார்கள். திருட்டுக்கிழவி ஒரு நாயையும் ஒரு ஆட்டையும் வளர்த்துவந்தாள். அவைகளில் ஒன்றை மீனை இழந்த கிழவிக்குத் தரும்படி தீர்ப்புச்செய்தார்கள்.

நாய் வீடுகாக்க உதவும் என நினைத்து ஆட்டைக் கொடுத்துத் தன் வழக்கைத் தீர்த்துக்கொண்டாள்.

மீன்கிழவி அந்த ஆட்டைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய்ப் பிள்ளைபோல அதை வளர்த்துவந்தாள்.

அப்படி வளர்த்துவரும் நாட்களிலோர்நாள் அவ்வாட்டை வளர்க்கும் கிழவி அதனைச் சந்தைக்கு அனுப்பிச் சில சாமான் வாங்கிவரச் சொன்னாள். அப்படியே அயலூர்ச் சந்தைக்குச் சென்றது. சாமான்களை வாங்கிக்கொண்டு திரும்பும்போது பெருங்காற்றடித்து மழை பெய்தது; ஆகாயமெல்லாம் ஒரே இருளாக இருந்தது. கொஞ்சமும் வழிதெரியவில்லை. அதனால் அந்த ஆடு அவ்வூர்க் கோமட்டி வீட்டிற்குச் சென்று, மூலையில் படுக்கத் தனக்கு இடந்தரும்படி வேண்டிற்று. கோமட்டி இடங்கொடாமல் துரத்தினான். கோமட்டியின் தாசியொருத்தி, "ஐயோ, பாவம், வாயில்லாத ஜீவன்," என்று சொல்லி இரக்கப்பட்டு ஒரு மூலையைக்காட்டி அதில் படுத்து இராப்பொழுதைக் கழிக்கச்சொன்னாள்.

ஆடுபோய்ப் படுத்த இடத்தில் பூவராகன் கொட்டிவைத்திருந்தது. ஆடு மெதுவாக அந்தப் பூவராகன்களையெல்லாம் நள்ளிரவில் விழுங்க ஆரம்பித்தது.

அந்த ஓசையைக் கேட்டுக் கோமட்டி, தன் பெண்டாட்டியைப் பார்த்து, "அங்குக் கேட்கும் ஓசையைப்பற்றி உனக்குத் தெரியுமோ?" என்றான்.

அப்பொழுது அந்த ஆடு, "செட்டியாரே, நான் சந்தையில் மொச்சை வாங்கினேன். அதை இப்பொழுது தின்கிறேன்," என்று சொல்லிற்று.

அவ்வார்த்தைகளைக் கேட்டுச் செட்டியார் நம்பினார். பிறகு பொழுதுவிடியுஞ் சமயத்தில் அந்த ஆடு எழுந்து, "செட்டியாரே, செட்டியாரே, மழை விட்டிருக்கிறது; நான் போய்வருகிறேன். நீங்கள் கதவை மூடிக்கொள்ளுங்கள்," என்று சொல்லிவிட்டுத் தன் வீடுநோக்கி வந்தது.

வீட்டை யடைந்ததும் கிழவியைப்பார்த்து, "அம்மா, அம்மா, எனக்கு வயிறு வலிக்கிறது. உலக்கை எடுத்துவந்து வயிற்றில் இடி," என்று சொல்லி வேண்டிற்று.

கிழவி அப்படியே உலக்கை கொண்டுவந்து வயிற்றில் இடித்தாள். இடித்ததும் பூவராகன்களெல்லாம் கக்கிற்று. கிழவி அவற்றை எடுத்து வைத்துக்கொண்டாள்.

இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த திருட்டுக் கிழவி, மறு சந்தைக்குத் தன் நாயை அனுப்பினாள். அன்றையதினமும் அப்படியே காற்றடித்து மழை பெய்தது. நாய் அந்த இரவு சக்கிலியன் வீட்டில் படுத்தது. அப்போது அங்கிருந்த தோலையும் இரும்பையும் விழுங்கிற்று. பிறகு, பொழுதுவிடியும் சமயத்தில் எழுந்து நாய் வீடுவந்து சேர்ந்தது. உடனே கிழவி உலக்கையால் அதன் வயிற்றில் குற்றினாள். அது இரும்பையும் தோலையும் கக்கிற்று. அவற்றைக் கண்ட கிழவி மேலும் மேலும் அதன் வயிற்றில் குற்றினாள். குற்றக் குற்றத் தோற் றுண்டுகளே வந்து விழுந்தன. கடைசியில் நாயும் நோவைப் பொறுக்கமுடியாமல் விழுந்து இறந்தது. திருட்டுக்கிழவி தன் தீய செய்கைக்காக விசனப்பட்டாள். நல்ல குணவதியான மீன்கிழவி தனக்குக் கிடைத்த பூவராகனுடன் சுகமே உண்டு காலங்கழித்து வந்தாள்.


8570

சுபம்.

Printed at the S. P. C. K. Press, Vepery, Madras—1917.

## மாக்மில்லன் கம்பெனியார் பதிப்புக்களாகிய புதிய தமிழ்ப் புஸ்தகங்கள்.

இவை மிகவும் ஸுலபமான நடையில் எழுதப் பெற்றிருப்பதோடு ஒவ்வொன்றிலும் நீதிகளைப் போதிக்கும் விநோதமான கதைகள் பல அடங்கியுள்ளன.

விலை, அணா.

1. பால நீதி போதம்.—
   ஈஸாப் என்பவர் இயற்றிய கற்பித கதைகளின் மொழி பெயர்ப்பு .... .... .... .... .... $2\frac{1}{2}$
2. திரிபுரக் கதைகள்.—
   ஆங்கில பாஷையில் உள்ள ‘Tales from Troy’ என்பதன் மொழிபெயர்ப்பு .... .... .... .... .... $2\frac{1}{2}$
3. அபூர்வ கதைகள்.—
   கிரிம் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய கதைகள் சிலவற்றின் மொழிபெயர்ப்பு .... .... .... .... .... 2
4. இந்திய மாயா விநோதக் கதைகள்.—
   இரண்டு இராஜ புத்திரிகள்: லிங்கோவும் ராக்ஷதனும்: மத்ஸ்ய ராஜன்: பேசும் ஆமை: ஜோதிமதி .... .... .... 4
5. இளமையும் ஒழுக்கமும் அல்லது இரண்டு பிள்ளைகள்.—
   ஆங்கில பாஷையில் உள்ள ‘History of Sandford and Merton’ என்னும் புஸ்தகத்தைப்போன்றது .... 8

### பல படங்கள் அடங்கிய கதா வாசக புஸ்தகங்கள்.

1. பால சிக்ஷை .... .... .... .... .... 2
2. முதலாவது கதா வாசக புஸ்தகம் .... .... .... $2\frac{1}{2}$
3. இரண்டாம் கதா வாசக புஸ்தகம் .... .... .... 3
4. மூன்றாம் கதா வாசக புஸ்தகம் .... .... .... 4
5. நான்காம் கதா வாசக புஸ்தகம் .... .... .... 5
6. ஐந்தாம் கதா வாசக புஸ்தகம் .... .... .... 6

சென்னபட்டணத்திலுள்ள மாக்மில்லன் கம்பெனியாரிடம் விலைக்குக் கிடைக்கும்.

